இப்பாட்டால், a.मोक्षप्रदत्व[மோக்ஷப்ரதத்வ]மும், b.जगत् कारणत्व [ஜகத்காரணத்வ]மும்-शरण्यत्व [சரண்யத்வ]மும், மற்றும் c.सर्वप्रकार उपकारकत्व[ஸர்வப்ரகார உபகாரகத்வ]மும், d.कृपा विशेषवत्व[க்ருபா விசேஷவத்வ]மும், e.स्वातन्त्र्य [ஸ்வாதந்த்ர்ய]மும் – அவற்றில் सारतम[ஸாரதம]மான उपकार-विशेष[உபகார விசேஷ]மும், f. नित्य निर्दोषत्व [நித்ய நிர்தோஷத்வ]மும், g. नित्यसूरि निर्वाहकत्व ....

| | |
|---|---|
| <u>திருமந்த்ரம்</u> : अ[அ] | = அமலன்/ஆதி/ பிரான் (रक्षण–भेद [ரக்ஷண பேத]த்தைச் சொல்லி) |
| म /लुप्त चतुर्थी [ம /லுப்த சதுர்த்தி] | = அடியார்க்கு |
| उ [உ] | =அடியார்க்<u>கே</u> ( अवधारण[அவதாரண] த்தால்) |
| नमः (न + मः) [நம: =ந + ம:] | =என்னை ஆட்படுத்த (இந்த *சேஷத்வம்*, பகவானையும்-பாகவதர்களையும் அன்றி மற்றவர்க்கு [தனக்கும்கூட] இல்லாத வரையறை கொண்டது) |
| नारायण[நாராயண] | =விமலன்/ விண்ணவர்கோன்/ வேங்கடவன் /நிமலன்/ நின்மலன் (ईयते अनेन/ अस्मिन्/ अस्मै [ஈயதே அநேந/ அஸ்மிந்/ அஸ்மை] என்பதால்) |
| आय [ஆய] | =நீதிவானவன்(கைங்கர்யத்தைஏற்றுக்கொள்பவன்) |
| <u>த்வயம்</u>: पूर्वोत्तर नारायण शब्दं [பூர்வோத்தர நாராயண சப்தம்] | = அரங்கத்தம்மான் (सौलभ्यत्व –परत्वकाष्ठै [ஸௌலப்யத்வ-பரத்வ காஷ்டை]யானவன்) |
| चरणशब्दं | =திருக்கமலபாதம் (पावनत्व–भोग्यत्व [பாவநத்வ – போக்யத்வ] ங்களாலே) |

<u>குறிப்பு</u> : இத்தொகுப்பின் முடிவில், ஒவ்வொரு பாசுரமும் மந்த்ரங்களின் அர்த்தத்தைச் சொல்வது காட்டப்பட்டுள்ளது (பக்கம் 105)

[நித்யஸூரி நிர்வாஹகத்வ]மும் –नित्यविग्रहवत्व[நித்ய விக்ரஹவத்வ]மும், h.सर्वसुलभत्व[ஸர்வ ஸுலப]மும், i.सौशील्य[ஸௌசீல்ய]மும், j.वात्सल्य[வாத்ஸல்ய]மும், k.कैङ्कर्योद्देश्यत्व[கைங்கர்யோத்தேச்யத்வ]மும் कैङ्कर्य स्थान विशेषवत्व[கைங்கர்ய ஸ்தாநவிஶேஷவத்வ]மும், l.सर्व स्वामित्व[ஸர்வ ஸ்வாமித்வ]மும், m.திருவடிகளினுடைய पावनत्व [பாவநத்வ]மும்-भोग्यत्व[போக்யத்வ]மும், அவற்றைத் தான் n.अनायास[அநாயாஸ]மாக अनन्यदृष्टि[அநந்யத்ருஷ்டி]களாகக்கொண்டு अनुभवि[அநுபவி]க்கப்பெற்றபடியையும் முன்னிட்டுக்கொண்டு श्रिय:पति[ச்ரிய:பதி]யினுடைய पराकाष्ठाप्राप्त[பராகாஷ்டா ப்ராப்த]ங்களான गुणप्रकर्ष[குணப்ரகர்ஷ]ங்களை 1 अनुसन्धि[அநுஸந்தி]த்தார்.

அவற்றில் a. संसारनिवर्तकत्वकाष्ठै[ஸம்ஸார நிவர்த்தகத்வ காஷ்டை]யாவது – களையற்ற कैङ्कर्य [கைங்கர்ய]த்தைக் கொடுக்கை;

b. कारणत्वकाष्ठै[காரணத்வகாஷ்டை]யாவது– कारणान्तर [காரணாந்தர] 2 ங்களெல்லாம் தான் இட்ட வழக்காய், தனக்காதல் தன்னுடைய ज्ञान-शक्ति आदि[ஜ்ஞாந-சக்தி ஆதி]களுக்காதல், ஒரு कारणसंभावनै [காரண ஸம்பாவனை] 3 யன்றிக்கே இருக்கை;

-----------------------------

*1.உயர்ந்த நிலையடைந்த குணங்களின் மேன்மை; 2. மற்ற காரணங்கள்; 3. காரணமெனப்படும்;*

---

(कारणसंभावनैயன்றிக்கே) - உலகில் 'காரணம்' எனப்படும் யாவையும் பகவானால் ஆக்கப்பட்டவை; ஆனால் பகவானின் ஸ்வரூப/ குணங்களுக்கு காரணமேதுமில்லை.

शरण्यत्वकाष्ठै[சரண்யத்வ காஷ்டை]யாவது – தன்னை रक्षक [ரக்ஷக]னாக பற்றினார்க்குத் தன்னையொழிய மற்றொருவரை रक्षक[ரக்ஷக]ராகப் பற்ற வேண்டாதபடி இருக்கை.

c.उपकारत्वकाष्ठै[உபகாரத்வகாஷ்டை]யாவது – ஒரு क्षुद्रव्याज [க்ஷுத்ர வ்யாஜ]த்தை अवलंबि[அவலம்பி]த்து 1, उभय विभूति विशिष्ट [உபய விபூதி விசிஷ்ட]னான தன்னை अनुभाव्य[அநு பாவ்ய]னாகக் 2 கொடுத்தும், அதற்குமேல் கொடுக்கலாவது இல்லாமையாலே नित्य ऋणि[நித்ய ரிணி] 3 யாயிருக்கை;

-----------------------------

*1. சிறு காரணத்தை வைத்து; 2. ரஸிக்க; 3. எப்போதும் கடன்-பட்டவனாக;*

--------------------------------------------------------------------

(தன்னையொழிய) - *त्वयि रक्षति रक्षकैः किमन्यैः* [த்வயி ரக்ஷதி ரக்ஷகை: கிமந்யை:] (காமாசி 8 – காக்க நீ இருக்க மற்றவர்கள் எதற்கு?)

(க்ஷுத்ரவ்யாஜத்தை . . . नित्य ऋणியாயிருக்கை) - *सर्वज्ञोऽपि हि विश्वेशः सदा कारुणिकः अपि सन् । संसारतन्त्रवाहित्वात् रक्षापेक्षां प्रतीक्षते* [ஸர்வஜ்ஞோபி ஹி விச்வேச: ஸதா காருணிகோபி ஸந் | ஸம்ஸார தந்த்ரவாஹித்வாத் ரக்ஷா-பேக்ஷாம் ப்ரதீக்ஷதே] (ल. त 17.78 – எல்லாம் அறிந்தவனும்-உலகையே ஆள்பவனும்- கருணாவானுமாக இருக்கும்போதிலும், பக்ஷபாதமின்றி உலகை நடத்தவேண்டி, 'காப்பாற்று' என நாம் யாசிப்பதை எதிர்பார்க்கிறான் )

- *अञ्जलिं याचमानः* [அஞ்சலிம் யாசமாந:](गोपा.वि 20 – கைகூப்புதலை வேண்டுபவன்); *स्वेनैव क्लृप्तमपदेशमवेक्षमाणः* [ஸ்வேநைவ க்லுப்தமப-தேசமவேக்ஷமாண:](शर.दीपि-14 தானே உண்டாக்கிய சிறுவ்யாஜத்தை எதிர்ப்பார்ப்பவனாய்)
- *गोविन्देति यदाऽऽक्रन्दत् कृष्णा मां दूरवासिनम् । ऋणं प्रवृद्धमिव मे हृदयान्नापसर्पति* [கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூர வாஸிநம் | ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்பதி] (भा.उ 47.22) என்று தன்னை அண்டிய த்ரௌபதிக்குத் தான் வஸ்த்ரம்தவிர வேறேதும் வழங்காததால், எப்போதும் அவளுக்கு கடன்பட்டு நிற்பதாகக் கண்ணன் எண்ணுகிறான்; இதையே பட்டர்

d. कृपाकाष्ठै [க்ருபா காஷ்டை]யாவது – 'शत्रु[சத்ரு]வினுடைய संबन्धि [ஸம்பந்தி]களும்கூட त्याज्यं [த்யாஜ்யம்] 1' என்ற பரிவர் முன்னே 'शत्रु[சத்ரு]தானும் இசையில் स्वीक[ஸ்வீக]ரிப்பேன்' என்று எதிர்பேசும்படியான இரக்கத்தை உடையனாய், அவர்கள் தாங்களும் இவனைக் கைக்கொள்ளும்படி பண்ணுகை;

e. स्वातन्त्र्यकाष्ठै [ஸ்வாதந்த்ர்ய காஷ்டை]யாவது – தன்னையும் பிறரையும், தான் நினைத்த நிலைகளிலே நிறுத்தும் போது விலக்கவல்லாரன்றிக்கே இருக்கை;

-----------------------------

*1. தள்ளத் தக்கது;*

---------------------------------------------------------------------

*ऐश्वर्यमक्षरगतिं परमं पदं वा कस्मैचित् अञ्जलिभरं वहते वितीर्य । अस्मै न किञ्चिदुचितं कृतमित्यथाम्ब त्वं लज्जसे कथय कोऽयमुदारभाव:* [ஐச்வர்யமக்ஷரகதிம் பரமம் பதம் வா கஸ்மைசித் அஞ்ஜலிபரம் வஹதே விதீர்ய | அஸ்மை ந கிஞ்சிதுசிதம் க்ருதமித்யதாம்ப த்வம் லஜ்ஜஸே கதய கோயமுதாரபாவ:] (श्रीगुण 58) என நம்பின ஆசிரிதர்க்கு மோக்ஷம்தவிர வேறொன்றும் தரவில்லையே என நினைக்கும் பிராட்டியின் ஔதார்யத்தை வியக்கிறார்.

(त्याज्यं என்ற . . . . स्वीकरिப்பேன்) *वध्यतां एष तीव्रेण दण्डेन सचिवै: सह । रावणस्य नृशंसस्य भ्राता ह्येष विभीषण: ॥ ईदृशं व्यसनं प्राप्तं भ्रातरं य: परित्यजेत् । को नाम स भवेत्तस्य यमेष न परित्यजेत्* [வத்யதாம் ஏஷ தீவ்ரேண தண்டேந ஸசிவைஸ்ஸஹ | ராவணஸ்ய ந்ருசம்ஸஸ்ய ப்ராதா ஹ்யேஷ விபீஷண: | ஈத்ருசம் வ்யஸநம் ப்ராப்தம் ப்ராதரம் ய: பரித்யஜேத் | கோ நாம ஸ பவேத்தஸ்ய யமேஷ ந பரித்யஜேத்] (रा 6.18.5-6 –உடன்வந்தவருடன் இவன் கொடிய தண்டனை மூலம் கொல்லத் தகுந்தவன்; துஷ்டனான ராவணனின் தம்பியல்லவா. இவ்வளவு கஷ்டத்திலும் ஸகோதரனை விடுபவன், எவனைத்தான் விடமாட்டான்)

- *विभीषणो वा सुग्रीव यदि वा रावणस्स्वयम्* (रा 6.18.34 – ஹே! ஸுக்ரீவ! விபீஷணனானாலும், ஏன், ராவணனாயிருப்பினும் கூட அழைத்து வா)

f. निर्दोषत्वकाष्टै[நிர்தோஷத்வ காஷ்டை]யாவது – दोषयुक्त 1 [தோஷ யுக்த]ங்களான पदार्थ[பதார்த]ங்களோடுண்டான संसर्ग[ஸம்ஸர்க்க] 2 த்தாலும்; பிறர்க்கு, अज्ञानदु:ख हेतु 3 [அஜ்ஞாந துக்கஹேது]க் களானவற்றைத் தான் अनुष्टि[அநுஷ்டி]த்தாலும், தனக்கு अज्ञान दु:ख[அஜ்ஞாந துக்க]ங்கள் வாராது இருக்கை;

g. स्वामित्वकाष्टै[ஸ்வாமித்வ காஷ்டை]யாவது – विभूतिमान् 4 [விபூதி மாந்]களையெல்லாம் தனக்கு विभूति[விபூதி]யாக உடையனா யிருக்கை;

h. सौलभ्यकाष्टै[ஸௌலப்ய காஷ்டை]யாவது – அகல நினைப் பார்க்கும் அகலவொண்ணாதபடி அணுக நிற்கை;

i. सौशील्यकाष्टै[ஸௌசீல்ய காஷ்டை]யாவது – தன் பக்கல் ईश्वरत्व [ஈச்வரத்வ]த்தை शङ्कि[சங்கி]ப்பார்க்கும் 5 –வெளியிடுவார்க் கும் தானே மறுமாற்றம் சொல்லி, மேலும் தன்னைத் தாழவிட்டுப் பரிமாறுகை;

j. वात्सल्यकाष्टै[வாத்ஸல்ய காஷ்டை]யாவது – अन्तरङ्ग[அந்தரங்க] ரா யிருப்பாரும் आश्रितविषय[ஆச்ரித் விஷய]த்தில் 6 ஆயிரம் கோடி குற்றம்காட்டிலும், अनादर[அநாதர]ம் 7 பிறப்பிக்கவொண்ணா திருக்கை;

------------------------------

*1. தோஷமுள்ள; 2. சேர்க்கை; 3. அறியாமை உண்டாக்கும்; 4. சொத்தையுடை வன்; 5. அணுக அச்சம்கொள்பவர்; 6. அடியார்திறத்தில்; 7. பொருட்படுத்தாமை;*

------------------------------

(विभूतिमान्களையெல்லாம்) –*உலகோர், உடையவராக எண்ணும் அனைத்து தேவதைகளும், பகவானுக்கு உடைமையாம்.*

(அணுக நிற்கை) - 'வளவேழுலகு' பதிகத்தை அநுஸந்திப்பது.

k. प्राप्यत्वकाष्ठै[ப்ராப்யத்வகாஷ்டை]யாவது – தன் विशेषण[விசேஷண]மாகவல்லது 1 மற்றொரு प्राप्य[ப்ராப்ய]மில்லாதிருக்கை;

l. आश्रितपक्षपातित्वकाष्ठै[ஆச்ரித பக்ஷபாதித்வ காஷ்டை]யாவது–सर्वसम[ஸர்வஸம]னான தான், आश्रित सङ्कल्प[ஆச்ரித ஸங்கல்ப]த்தோடே विरोधि[விரோதி]த்த தன் सामान्यसङ्कल्प[ஸாமாந்ய ஸங்கல்ப]த்தை असत् कल्प[அஸத்கல்ப]மாக்கி 2, अनितरसुलभ[அநிதர ஸுலப]மான आभिमुख्य[ஆபிமுக்ய]த்தைப் 3 பண்ணுகை;

m. भोग्यत्वकाष्ठै[போக்யத்வ காஷ்டை]யாவது – தன் स्वरूप [ஸ்வரூப]த்தை अनुभवि[அநுபவி]த்தால், தன்विशेषण [விஶேஷண]மாக सर्व[ஸர்வ]த்தையும் अनुभवि[அநுபவி]க்குமது அதின் திவலையோடு 4 ஒத்திருக்கை;

n. अयत्नभोग्यत्वकाष्ठै[அயத்ந போக்யத்வ காஷ்டை]யாவது – भोगार्थ[போகார்த்த]மான करणप्रेरण [கரண ப்ரேரண]மும் 5 வேண்டாதபடி,

------------------------------

*1. பிராட்டி/ தன் குணாதிகளைத் தவிர; 2. இல்லை என்றவாறாக்கி; 3. பிறர்க்கு அரிதான நன்னோக்கு; 4. துளி; 5. இந்த்ரியங்களின் தூண்டுதல்;*

------------------------------

(प्राप्यமில்லாதிருக்கை)- *काशी-वृक- अन्धक-शरासन- बाण-गङ्गा-संभूति-नामकृति-संवदन आद्युदन्तैः । स्वोक्ति-अंबरीष भय-शापमुखैश्च शंभुं त्वन्निघ्नं ईक्षितवतां इह कः शरण्यः* [காசீ-வ்ருக- அந்தக-சராஸந- பாண-கங்கா- ஸம்பூதி-நாமக்ருதி- ஸம்வதந-ஆத்யுதந்தை: | ஸ்வோக்தி அம்பரீஷ பய சாபமுகைச்ச சம்பும் த்வந்நிக்நம் ஈக்ஷிதவதாம் இஹ க: சரண்ய:] (शर. दीपिका 19 – இவ்வருத்தாந்தங்களை அறிந்தவர்களுக்கு, உன்னைத்தவிர சரணமாவதற்கு உரியவர் வேறு எவர் உளர்?)

(திவலையோடு ஒத்திருக்கை) - ஆராவமுதே; கொள்ளக் குறைவிலன்' என்று ஆழ்வார் அநுஸந்தித்ததை நினைப்பது.

தென்றலும் பரிமळ[பரிமள]மும் வந்தாற்போலே வந்து, விலக்கவொண்ணாதபடி अनुभाव्य[அநுபாவ்ய]னாயிருக்கை.

இவையெல்லாம் இப்பதங்களில் அடைவே, ஆழ்வார் अनुभवि[அநுபவி]த்தபடியை अनुसन्धि[அநுஸந்தி]ப்பது.

---

(अनुभवित्தபடியை) - முதற்பாட்டில் அநுபவித்த குணங்கள்

| *गुणप्रकर्ष*[குண ப்ரகர்ஷ]*ங்கள்* | *பொருள்* | *எல்லை ( काष्ठै [காஷ்டை]) / பாசுரம்* |
|---|---|---|
| 1.मोक्षप्रदत्व[மோக்ஷ ப்ரத்த்வ]ம் | *விடுவிப்பது* | संसारनिवर्तकत्वकाष्ठै [ஸம்ஸார நிவர்த்தகத்வ காஷ்டை]/அமலன் |
| 2.जगत्कारणत्व/शरण्यत्व[ஜகத்காரண-த்வ/சரண்யத்வ]ம் | *உலகை படைப்பது-பற்றப்படுகை* | कारणत्व–शरण्यत्वकाष्ठै [காரணத்வ / சரண்யத்வ காஷ்டை]/ஆதி |
| 3.सर्वप्रकार उपकार-कत्व [ஸர்வப்ரகார உபகாரகத்வ]ம் | *எல்லா விதத்தாலும் உபகரிக்கை* | उपकारत्वकाष्ठै[உபகாரத்வ காஷ்டை]/ பிரான் |
| 4.कृपाविशेषवत्व [க்ருபா விசேஷ-வத்வ]ம் | *விசேஷ அருள் கொடுப்பது* | कृपाकाष्ठै [க்ருபா காஷ்டை] / அடியார்க்கு ஆட்படுத்த |
| 5.स्वातन्त्र्य [ஸ்வா-தந்த்ர்ய]ம் | *எவர்க்கும் கீழ்ப்படியாமை* | स्वातन्त्र्यकाष्ठै[ஸ்வாதந்-த்ர்ய காஷ்டை] / என்னை ஆட்படுத்த |
| 6.नित्य निर्दोषत्व [நித்ய நிர்தோஷ-த்வ]ம் | *ஒருபோதும் தோஷம் தட்டாமை* | निर्दोषत्वकाष्ठै [நிர்தோஷத்வ காஷ்டை] / விமலன் |

| | | |
|---|---|---|
| 7.नित्यसूरि निर्वाहकत्वम्-नित्य विग्रहवत्व [நித்யஸூரி நிர்வாஹகத்வம் –நித்ய விக்ரஹ வத்வ]ம் | *நித்யஸூரிகளை ஆள்வது- திவ்ய மங்களவிக்ரஹம் உடைமை* | स्वामित्वकाष्ठै [ஸ்வாமித்வ காஷ்டை] /விண்ணவர்கோன் |
| 8.सर्वसुलभत्व [ஸர்வ ஸுலபத்வ]ம் | *மிக்க எளியனாவது* | सौलभ्यकाष्ठै[ஸௌலப்ய காஷ்டை]/ வேங்கடவன் |
| 9.सौशील्य [ஸௌசீல்ய]ம் | *தாழ்ந்தவரோடும் இரண்டறக்கலப்பது* | सौशील्यकाष्ठै[ஸௌசீல்ய காஷ்டை] / நிமலன் |
| 10.वात्सल्य [வாத்ஸல்ய]ம் | *அடியார் குற்றம் பாராமை* | वात्सल्यकाष्ठै[வாத்ஸல்ய காஷ்டை] / நின்மலன் |
| 11.कैङ्कर्योद्देश्यत्व [கைங்கர்யோத்தேச்யத்வ]ம்-कैङ्कर्य स्थान विशेषवत्व [கைங்கர்ய ஸ்தாநவிசேஷவத்வ]ம் | *கைங்கர்யத்துக்கு இலக்காவது-கைங்கர்யத்துக்குரிய விண்ணாடு உடைமை* | प्राप्यत्वकाष्ठै[ப்ராப்யத்வ காஷ்டை] / நீதி வானவன் |
| 12.सर्वस्वामित्व [ஸர்வ ஸ்வாமித்வ]ம் | *எல்லோர்க்கும் நாயகனாவது* | आश्रितपक्षपातित्वकाष्ठै [ஆச்ரித பக்ஷபாதித்வ காஷ்டை]/ அரங்கத் தம்மான் |
| 13.திருவடிகளினுடைய पावनत्व [பாவநத்வ]ம்-भोग्यत्व [போக்யத்வ]ம் | *திருவடிகளின் தூய்மை-இனிமை* | भोग्यत्वकाष्ठै[போக்யத்வ காஷ்டை]/ திருக்கமல பாதம் |
| 14.अनायास [அநாயாஸ]மாக अनुभवि [அநுபவி]க்கப் பெற்றமை | *முயற்சியின்றி அநுபவிக்கப்படும் தன்மை* | अयत्नभोग्यत्वकाष्ठै[அயத்ந போக்யத்வ காஷ்டை] / வந்து என் கண்ணினுள்ளன ஒக்கின்றவே |

இவன் திருவடிகளில் சிவப்புக்கு நிகரான திருப் பீதாம் பரம் தன் சிந்தைக்கு विषय[விஷய]மாகிற தென்கிறார் :

***உவந்த உள்ளத்தனாய் உலகமளந்தண்டமுற****
***நிவந்த நீள் முடியன் அன்று நேர்ந்த நிசாசரரைக்****
***கவர்ந்த வெங்கணைக் காகுத்தன் கடியார்பொழில் அரங்கத்தம்மான்****
***[ அரைச்***

***சிவந்தஆடையின்மேல் சென்றதாம் என்சிந்தனையே(2)***

உ வந்த உள்ளத்தனாய்)– மஹாபலியாலே अपहृत [அப ஹ்ருத]மான राज्य[ராஜ்ய]த்தை மீட்டுத் தரவேண்டு மென்று इन्द्रादि[இந்த்ராதி]கள் இரக்க, उदाराः सर्व एवैते [உதாரா: ஸர்வ எவைதே] 1 என்கிறபடி இவர்கள் பக்கலிலே प्रीत[ப்ரீத] மான திருவுள்ளத்தையுடையனாய், असुर[அஸுர]னேயாகி லும் प्रह्लाद[ப்ரஹ்லாத]னோடு உண்டான குடல் துவக்குப் भावि[பாவி]த்து 2, आनुकूल्य-मिश्र[ஆநுகூல்ய மிச்ர]னான 3 महाबलि [மஹாபலி]யை அழியச் செய்ய நினையாதே, அவனுடைய औदार्य[ஔதார்ய]த்திற்கு अनुगुण[அநுகுண]மாகத் 4 தான் இரப்பா ளனாய்ச் சென்று, அவன் கொடுக்க வாங்குகையாலே, அவனளவிலும் अनुग्रहयुक्त[அநுக்ரஹயுக்த]னாய் 5, अपेक्षा निरपेक्ष [அபேக்ஷா நிரபேக்ஷ]மாக 6 எல்லார் தலையிலும் தன் திருவடி-

---

*1. (என்னையே உபாஸிக்கும் ஆர்த்தன், ஜிஜ்ஞாஸு, அர்த்தார்த்தீ, ஜ்ஞாநீ என்ற) நால்வருமே, எம்பெருமானுக்கு 'அளிப்பவன்' என்னும் புகழை அளிப்பதால், வள்ளல்களாக பகவானால் எண்ணப்படுகிறார்கள் (கீதை 7.18); 2. சரீர ஸம்பந்தத்தைக் கருதி; 3. அநுகூலமும் கலந்த; 4 கொடைக்குத் தகுந்த; 5. அநுக்ரஹம் செய்யக் கருதி; 6. கைம்மாறு கருதாது;*

களை வைக்க, <u>விலக்காதவளவாலும்</u> <u>सर्वविषय [ஸர்வவிஷய]த்திலும் உவந்த உள்ளத்தனாய்</u>;

உலகமளந்து) – அளவுபடக்கொடுத்தோம் என்றிருக்கிற असुर[அஸுர]ன் முன்னே எல்லா लोक[லோக]ங்களையும் தன் திருவடிகளாலே அளவுபடுத்தி;

அண்டமுற நிமிர்ந்த நீள் முடியன்) – மேலே கவிற்ற कनकछत्र [கனக சத்ர]ம் 1 போலேயிருக்கிற ब्रह्माण्ड भित्ति

-----------------------------

1. *பொற்குடை;*

-----------------------------

(விலக்காதவளவாலும் ) -*अलमेषा परित्रातुं राघवद्राक्षसीगणम् । अभियाचाम वैदेहीं एतद्धि मम रोचते* [அலமேஷா பரித்ராதும் ராகவாத் ராக்ஷஸீ கணம் | அபியாசாம வைதேஹீம் எதத்தி மம ரோசதே] -(रामा 5.58.87) இப்படி த்ரிஜடை) உபதேசிக்க, ராக்ஷஸிகள் விலக்காதமட்டே பற்றாசாகப், பிராட்டி தன் வாத்ஸல்ய அதிசயத்தாலே *अवोचद्यदि तत्तथ्यं भवेयं शरणं हि वः* [அவோசத்யதி தத்தத்யம் பவேயம் சரணம் ஹி வ:] (रामा 5.58.90).... என்று அருளிச் செய்தாள். [பரி. விபா – ரஹஸ்யத்ரயஸாரம்]

(सर्वविषयத்திலும் உவந்த உள்ளத்தனாய்) – தேவதைகள் இழந்த ராஜ்யத்தை மீட்டுத்தரும்படி எவரிடமும் கேட்காமல், தன்னிடம் வேண்டியதால், उदारा: सर्व एवै ते [உதாரா: ஸர்வ எவை தே] என்ற உகப்பு; மீட்டுத் தருகின்ற வ்யாஜத்தில் கச்யப-அதிதிக்குத் தானே பிள்ளையாய் அவதரித்து, கொடுத்த வரத்தை நிறைவேற்றிய உகப்பு ; மாவலி தானத்துக்குத் தடையாய் நின்ற 'சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய உகப்பு; குருவின் வார்த்தையையும் உபேக்ஷித்து மாவலி தாரைவார்த்து அளித்ததால் உகப்பு ; திரிவிக்ரமனாக வளர்ந்ததால் 'என்னிது மாயம்! என்னப்பன் அறிந்திலன், முன்னைய வண்ணமே கொண்டளவாயென்ன' எதிர்த்த மன்னு நமுசியை வானில் சுழற்றிய உகப்பு ; எல்லாவற்றிற்கும் மேலாக, இதை வ்யாஜமாக வைத்து, அனைத்து சராசரங்களுக்கும் தன் திருவடி ஸம்பந்தம் கிட்டுமாறு செய்த உகப்பு ; ஆக எல்லா விதத்தாலும் உகப்பு.

[ப்ரஹ்மாண்ட பித்தி]த்தியிலே கிட்டும்படி विजृंभि[விஜ்ரும்பி]த்த 1 பெரிய திருவபிஷேகத்தையுடையவன்; அவன்தன்னைப் போலே திருவபிஷேகத்திற்கும் 2 அவனோடொக்க வளருகைக்கு ஈடான महिमा [மஹிமா]உண்டு. कर्मवश्य[கர்மவச்ய]தை 3 தோற்றும்படி, பிறவித்தொடக்கமாகச் சடையும்-குண்டிகையும் சுமந்து திரிகிற परिच्छिन्नेश्वर[பரிச்சிந்நேச்வர]ர் 4 பார்த்து நிற்க, இப்படி முடிசூடி நிற்கையாலே उभयविभूति निर्वाहकत्व [உபயவிபூதி நிர்வாஹகத்வ]மும் 5 अभिव्यक्त [அபிவ்யக்த]ம் ஆகிறது. இத் त्रिविक्रमापदान[த்ரிவிக்ரமாபதாந]ம் 6 சொன்ன வித்தாலே ईश्वरत्व शङ्काविषय[ஈச்வர சங்கா விஷய]ரான 7 इन्द्रादि[இந்த்ராதி]கள் இரப்பாளரானபடியும்; 'குறைகொண்டு நான்முகன்' इत्यादि [இத்யாதி]களிற்படியே ब्रह्मा[ப்ரஹ்மா] திருவடி விளக்கி आराधक [ஆராதக]னானபடியும் 8; रुद्र[ருத்ர]ன் तीर्थप्रसाद[தீர்த்த ப்ரஸாத]ம் பெற்று पूत[பூத] னான 9 படியும் சொல்லித்தாயிற்று.

இத்தால் முன்பாட்டில் சொன்ன इष्टप्रापकत्व [இஷ்ட ப்ராபகத்வ]த்தையும் 10 उदाहरि[உதாஹரி]த்ததாய், இனி अनिष्ट निवर्तकत्व[அநிஷ்டநிவர்த்தகத்வ]த்தையும் 11 उदाहरि[உதாஹரி]க்கிறார்:

------------------------------

*1. ப்ரஹ்மாண்டத்தின் சுவர்வரை வளர்ந்த; 2. கிரீடத்துக்கும்; 3 கர்மத்துக்குப் பணிந்த; 4 அளவுபட்ட மாட்சிமையுடையவர்; 5 நித்ய-லீலா விபூதியை ஆளும் தன்மை; 6 த்ரிவிக்ரமனாக உலகமளந்த நற்செயலை; 7. பகவானோ என ஸந்தேஹிக்கப்படுபவரான; 8. பூஜிப்பவனான; 9. சுத்தியடைந்த; 10 விரும்பியதை அடைந்ததை; 11. துன்பத்தைப் போக்கினமையை;*

அன்று நேர்ந்த நிசாசரரைக் கவர்ந்த வெங்கணைக் காகுத்தன்) – देव[தேவ]ர்களும் ऋषि [ரிஷி]களும்கூடக் குடியிருக்க வொண்ணாதபடி त्रैलोक्य क्षोभ[த்ரைலோக்ய க்ஷோப]ம் 1 பிறந்து देव[தேவ]ர்கள் शरणागत[சரணாகத]ரானவன்று चक्र-वर्ति[சக்ரவர்த்தி]த் திருமகனாய் அவதரித்து, ताटका-ताटकेय-विराध-कबन्ध-खर-दूषणादि[தாடகா-தாடகேய-விராத-கபந்த-கர-தூஷணாதி]களை निराकरि[நிராகரி]த்து 2, लङ्कै[லங்கை]க்கு परिघै[பரிகை]யான लवणार्णव[லவணார்ணவ]த்தை 3 पर्वत[பர்வத]ங்களாலே பண்புசெய்து 4, கொம்பிலே தத்தித்திரியும் குரங்குப் படையைக்கொண்டு लङ्कै[லங்கை]யை அடைமதிள் படுத்தின 5 அன்றும், பெருமாளுடைய प्रभाव[ப்ரபாவ]ம் அறியாதே விளக்கு-விட்டில் போலே வந்து எதிர்ந்த, பகல்போர் அறியாத कूटयोधि[கூடயோதி]களை 1 யெல்லாம் ‘எனக்கு எனக்கு’ என்று இரையாகக் கைக்கொண்ட दीप्तपावकसङ्काश[தீப்த பாவக ஸங்காச]ங்களான 2 திருச்சரங்களை உடையனாய், வெங்கதிரோன் குலத்துக்கு 3 ஓர் விளக்காய் நின்றவன்;

காகுத்தன்) – मायावि [மாயாவி]களான राक्षस [ராக்ஷஸ]ரும்கூட मोहि[மோஹி]க்கும்படி मनुष्यभाव[மநுஷ்ய பாவ]

-----------------------------

*1. மூவுலகும் கலங்கினமை; 2. வதைத்து; 3. இலங்கைக்கு அகழி போன்றதான உப்புக் கடலை; 4 சமன் செய்து; 5. முற்றுகையிட்ட; 1. வஞ்சப் போர்புரியும்; 2. எரியும் தீ போன்ற; 3. ஸூர்ய வம்சத்துக்கு;*

------------------------------------------------------------------

(राक्षसரும்கூட मोहिக்கும்படி) –ராவணனிடம், சூர்பணகை - *दीर्घ बाहु: विशालाक्ष: चीरकृष्णाजिनाम्बर: । कन्दर्प समरूपश्च रामो दशरथा त्मज:* [தீர்க்க

பாஹு: விசாலாக்ஷ: சீர க்ருஷ்ணாஜிநாம்பர: | கந்தர்ப்ப ஸமரூபச்ச ராமோ தசரதாத்மஜ:] (रामा 3.34.5) 'விரூபம் செய்தவனோ, அதிரூபன்!' என்னும்படி, [நீண்டகரங்களும், அகன்ற கண்களும், மான்தோல்-மரவுரியும், மன்மதன் போன்ற உருவமும் கொண்டவன், தசரதன் குமாரனான ராமன்]

- யுத்த பூமியிலிருந்து புறமுதுகிட்டு ஓடிவந்த அகம்பநன், ராவணனிடம் சொன்னது – *पुत्रो दशरथस्यास्ते सिंहसंहननो युवा । रामो नाम महास्कन्धो वृत्तायत महाभुजः ॥ श्यामः पृथुयशाः श्रीमान् अतुल्य बलविक्रमः । हतस्तेन जनस्थाने खरश्च सहदूषणः* [புத்ரௌ தசரதஸ்யாஸ்தே ஸிம்ஹ-ஸம்ஹநநோ யுவா | ராமோ நாம மஹாஸ்கந்தோ வ்ருத்தாயத மஹாபுஜ: || ச்யாம: ப்ருதுயசா: ஸ்ரீமாந் அதுல்ய பலவிக்ரம: | ஹதஸ்தேந ஜநஸ்தாநே கரச்ச ஸஹதூஷண:] (रामा 3.21.10-11) [தசரத புத்ரனான ராமன், சிங்கத்தை வெல்பவன்/ வாலிபன்/ திரண்ட தோள்களுடையவன்/ துடிக்கும் கரங்களுடையவன்/ மெய்வண்ணன்/ மிக்க புகழுடையவன்/ திருவுடையவன்/ நிகரில்லா வீரமும்-பலமும் கொண்டவன்; ஜநஸ்தான யுத்தத்தில், கர-தூஷணாதிகள் அவனால் கொல்லப்பட்டனர்.]

- கபடம் செய்ய வற்புறுத்திய ராவணனிடம் மாரீசன் வார்த்தை – *न च पित्रा परित्यक्तो नामर्यादः कथञ्चन । न लुब्धो न च दुश्शीलो न च क्षत्रियपांसनः ॥ न च धर्म गुणैर्हीनः कौसल्यानन्दवर्धनः । न च तीक्ष्णो हि भूतानां सर्वभूतहिते रतः ॥ रामो विग्रहवान् धर्मः साधुः सत्यपराक्रमः । राजा सर्वस्य लोकस्य देवानामिव वासवः ॥ अप्रमेयं हि तत्तेजः यस्य सा जनकात्मजा । न त्वं समर्थस्तां हर्तुं रामचापाश्रयां वने* [ந ச பித்ரா பரித்யக்த: நாமர்யாத: கதஞ்சந | ந லுப்தோ ந ச துச்சீலோ ந ச க்ஷத்ரிய பாம்ஸந: | ந ச தர்ம குணைர்ஹீந: கௌஸல்யானந்தவர்த்தந: | ந ச தீக்ஷ்ணோ ஹி பூதா நாம் ஸர்வபூத ஹிதே ரத: | ராமோ விக்ரஹவாந் தர்ம: ஸாது: ஸத்ய பராக்ரம: | ராஜா ஸர்வஸ்ய லோகஸ்ய தேவாநாமிவ வாஸவ: | அப்ரமேயம் ஹி தத்தேஜ: யஸ்ய ஸா ஜநகாத்மஜா | ந த்வம் ஸமர்த்தஸ்தாம் ஹர்தும் ராமசாபாச்ரயாம் வநே] (रामा 3.37.8-9,13,18) [கௌஸல்யையின் ஆனந்தத்தை பெருக்குபவனான ராமன், தந்தை யினால் வெறுக்கப்படுபவன் அல்ல/ பெரியோர்களை அவமதிப்பவன் அல்ல/ பேராசை-கெட்ட நடத்தை கொண்டவனல்ல/ க்ஷத்ரியர்களை வதைப்பவனல்ல/ அறம்-குணம் இவற்றில் குறைந்தவனல்ல/ எல்லோருடைய நன்மையை விரும்புபவன்; கோபம் கொள்பவனல்ல/ தர்மத்தின் மறுவடிவு/ ஸத்வம் மிக்கவன்/ அடியவர்க்கு மெய்யன், வஞ்சனையில்லாதவன், பராக்ரமம் உடையவன்/ தேவர்களுக்கு இந்திரன்போலே உலகுக்கே அரசன்/ அறியவரிய தேஜஸ் உடையவன்; இப்போ்ப்பட்டவனுடைய உடைமை, இந்த ஜானகீ. ராமனுடைய வில்லின் நிழலில் இருப்பவரை உன்னால் வெல்ல முடியாது]

த்தை முன்னிட்டு நின்றவன்.

கடியார்பொழில் அரங்கத்தம்மான்) – सूरि[ஸூரி]கள் முதலாக स्थावररूप[ஸ்தாவரரூப]ங்களைக் கொண்டு नित्यामोद [நித்யாமோத]ராய் நிற்கிற आराम[ஆராம]ங்களாலே 1 சூழப்பட்ட கோயிலாழ்வாருக்குள்ளே ब्रह्मादि[ப்ரஹ்மாதி]கள் आराधि[ஆராதி]க்க, सर्वस्वामि-त्वं[ஸர்வ ஸ்வாமித்வம்] தோற்றக் கண் வளர்ந்தருளுகிற பெரிய பெருமாளுடைய;

அரைச் சிவந்த ஆடையின்மேல்)– 'படிச்சோதி ஆடையொடும் பல்கலனாய் நின் பைம்பொற் கடிச்சோதி கலந்ததுவோ' 2 என்னும்படி திகழாநின்ற திருவரையிலே, मधुकैटभ रुधिरपटल[மதுகைடப ருதிரபடல]த்தாலே 3 போல पाटल [பாடல]மாய் 4 मरकतगिरिमेखलै[மரகத கிரிமேகலை]யிலே बालातप [பாலாதப]ம் 5 பரந்தாற்போலேயிருக்கிற திருப் पीतांवर विषय

-----------------------------

*1. தோட்டங்களாலே; 2. இடுப்பின் காந்தியானது, பீதாம்பரமாகவும், பல வித திருவாபரணங்களாகவும் ஆகி உன் திருமேனியில் சேர்ந்ததுவோ! (திருவாய் 3.1.1); 3. மதுகைடபர்களின் ரத்தப் பெருக்காலே; 4. பெருகுவதாய்; 5. மரகத மலைபோன்ற ஒட்டியாணத்திலே இளம்வெய்யில் போல;*

-----------------------------------------------------------------

- நல்லது எண்ணி, உதவி செய்த ஸாரதியிடம் ராவணன் வார்த்தை – *शत्रोः प्रख्यातवीर्यस्य रञ्जनीयस्य विक्रमैः । पश्यतो युद्धलुब्धोऽहं कृतः कापुरुषस्त्वया ॥* [சத்ரோ: ப்ரக்யாத வீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை: | பச்யதோ யுத்தலுப்தோஹம் க்ருத: காபுருஷஸ்த்வயா] (रामा 6.104.6) [போர்க்கலையில ஆர்வமுள்ள நான், சத்ருவாக இருந்த போதிலும் ராமனுடைய பரந்த வீர்யத்தை பார்த்து மயங்கினேன். (காப்பாற்ற எண்ணி, யுத்த களத்திலிருந்து என்னை வெளியேற்றி, பயந்தவன் போலாக்கினாய்) இப்போது உன்னால் ஆண்மையற்றவனாகக் கருதப்பட்டேனே !!

[பீதாம்பர விஷய]மாக;

சென்றதாம் என் சிந்தனையே) – அனாதிகால [அநாதி கால]ம் அனுசித விஷய[அநுசித விஷய]ங்களிலே ஓடி, அவர்கள் ஆடையிலே கட்டுண்ட என் சிந்தை, இவன் திருவடிகளை பற்றின என்னாலும் மீட்க வொண்ணாதபடி திருப் பீதாம்வர[பீதாம்பர]த்திலே சென்று துவக்குண்டது. 'என் சிந்தனை சென்றதாம்' என்கையாலே ஆஶ்சர்ய[ஆச்சர்ய]ம் தோற்றுகிறது. 'சென்றது' –நான் ப்ரேரி[ப்ரேரி]க்கப் போந்த தன்று; விஷய வைலக்ஷண்ய[விஷய வைலக்ஷண்ய]த்தாலே ஆக்ருஷ்ட [ஆக்ருஷ்ட]மாயிற்று 1.

------------------------------

*1. கவரப்பட்டது;*

------------------------------------------------------------------

(ஆடையிலே கட்டுண்ட என் சிந்தை) - கூடினேன் கூடி இளை யவர் தம்மொடு அவர்தம் கலவியே கருதி (பெரிய தி 1.1.1); வாணிலா முறுவல் சிறுநுதல் பெருந்தோள் மாதரார் வனமுலைப் பயனே பேணினேன் (பெரிய தி 1.6.1) – இவற்றை நினைக்க.

0000 0 0000

இப்படி இரண்டு பாட்டாலே, भगच्छेषत्व पर्यवसान [பகவச் சேஷத்வ பர்யவஸாந]த்தையும் 1, अन्यशेषत्व निवृत्ति [அந்ய சேஷத்வ நிவ்ருத்தி]யையும் 2 अनुसन्धि[அநுஸந்தி]த்து, अनन्तरं शेषभूत[அனந்தரம் சேஷபூத]மான चेतनाचेतनवर्ग प्रतिपादक [சேதநாசேதந வர்க்க ப்ரதிபாதக]மான 3 तृतीय अक्षर[த்ருதீயாக்ஷர]ம் முதலான तृतीयगाथै[த்ருதீய காதை]யாலே 4 शेषत्वज्ञानहीन[சேஷத்வஜ்ஞாநஹீன]ராயும் 5 / विच्छेद[விச்சேத]மில்லாத 6 शेषत्वज्ञान[சேஷத்வஜ்ஞாந]முடையராயும் / कादाचित्क[காதாசித்க] 7 शेषत्वज्ञानवान् [சேஷத்வ ....

----------------------------

*1. பகவானுக்கு அடிமை என்பதில் முடிகையும்; 2. பிறர்க்கு சேஷமாவதை விலக்குவது; 3. காட்டும்; 4. மூன்றாம் பாட்டாலே; 5. அடிமை என்ற அறிவற்றவராயும்; 6. இடையறா; 7. எப்போதாவது;*

----------------------------

(இப்படி இரண்டு பாட்டாலே) – भगच्छेषत्व पर्यवसान [பகவச் சேஷ பர்யவஸாந]ம் என்பது, எம்பெருமான் தன் விருப்பப்படி நம்மை வைப்பதில் முடிகிறது. அவன் நம்மை, பாகவதர்களுக்கு *சேஷவ்ருத்தி* செய்யும்படி ஆக்குகிறான். இதையே முதல் பாட்டில், 'அடியார்க்கு என்னை ஆட்படுத்த' என்றார்.

(अन्यशेषत्व निवृत्ति) என்பது, எம்பெருமான் தன் விருப்பப்படி, நம்மை மற்ற தேவதைகளுக்கு *சேஷனா*காமல் தடுப்பது. இதையே இரண்டாம் பாட்டில், 'உலகமளந்து' என்பதனால், 'உலகமே எம்பெருமானுக்கு அடிமை' என்னும் अयोगव्यवच्छेदं [அயோக வ்யவச் சேதம்]சப்தமாகவும்; இதனால் வேறு ஒருவர்க்கும் *சேஷ*னில்லை என்னும் अन्ययोगव्यवच्छेदं[அந்யயோக வ்யவச் சேதம்] அர்த்தமாகவும் சொல்லப்பட்டதாகிறது.

(शेषत्वज्ञानहीनராயும்) – இப்பாசுரத்தில், 'மந்திபாய்' என்பதால் சொல்லப் பட்ட சபலர்களை இங்கு प्रतिकूल [ப்ரதிகூல]ரென்கிறார்;

(शेषत्वज्ञानமுடையராயும்) –இப்பாசுரத்தில், 'வானவர்கள்' என்பதால் சொல்லப்பட்டவர்களை இங்கு अनुकूल[அநுகூல]ரென்கிறார்;

ஜ்ஞாநவாந்]களாயுமுள்ள जीव[ஜீவ]ர்களெல்லாம் தந்தாமுடைய ज्ञानानुरूप [ஜ்ஞாநரூப]மாக प्रतिकूल-अनुकूल-उभयविध प्रवृत्ति [ப்ரதிகூல-அநுகூல-உபயவித ப்ரவ்ருத்தி]களிலே 1 நிற்கிற நிலையை उदाहरि[உதாஹரி]த்துக்கொண்டு भगवदनुभव [பகவதநுபவ]த்தில் தமக்கு இடையிலே பெற்றதொரு प्रावण्य[ப்ராவண்ய]த்தை 2 अनुसन्धि[அநுஸந்தி]த்துப் प्रीत[ப்ரீத] ராகிறார்:

*மந்திபாய் வடவேங்கடமாமலை* வானவர்கள்*
*சந்திசெய்ய நின்றான் அரங்கத்தரவின் அணையான்**
*அந்திபோல் நிறத்தாடையும் அதன்மேல் அயனைப் படைத்த*
*[ தோரெழில்**
*உந்தி மேலதன்றோ அடியேனுள்ளத்தின்னுயிரே. (3)*

மந்திபாய் வடவேங்கடமாமலை) – चपल[சபல]ரான 3 संसारि [ஸம்ஸாரி]களுக்கு निदर्शन[நிதர்சந]மான4 वानरवर्ग[வாநர வர்க்க]ம் नानाशाखै[நாநா சாகை]யிலுள்ள 5 क्षुद्रफल [க்ஷுத்ரபல]ங்களை भुजि[புஜி]ப்பதற்காக, **गतागतं काम कामा लभन्ते** [கதாதம் காமகாமா லபந்தே] 6 என்கிறபடியே, ஒன்றைவிட்டு ஒன்றிலே பாய்ந்து

------------------------------

1. இருவகைச் செயலிலும்; 2. ஈடுபாடு ; 3.உலக இன்பங்களில் ஆசையுள்ளவர்கள்; 4. உதாரணமாக; 5. பல கிளைகளில்; 6. ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं,

------------------------------

(कादाचित्क शेषत्वज्ञानवान्) – இப்பாசுரத்தில், 'அரங்கத்து' என்ப தால் சொல்லப்பட்ட, 'பல ஸமயங்களில் அறியாதவராயும்/ சில போது அறிந்தவராயும்' இருப்பவர்களை उभयविध प्रवृत्त [உபய ப்ரவ்ருத்த]ர் என்கிறார்;

(இடையிலே பெற்றதொரு) – कादाचित्क शेषत्वज्ञानवा [காதா சித்க சேஷத்வ ஜ்ஞாநவா]னாய்ப் பிறந்துவைத்தும், தாம் இப்போது எம்பெருமானிடம் ஈடுபாடு பெற்றதை;

திரிகைக்கு நிலமாய்; कलियुग[கலியுக]த்தில் भागवत संभाव[பாகவத ஸம்பாவ]னை 1 யுடைத்தாக पुराणसिद्ध[புராண ஸித்த]மாகையாலே ஆழ்வார்கள் அவதரிக்கப்பெற்ற अगस्त्य भाषा देश [அகஸ் த்யபாஷா தேச]த்திற்கு 2 उत्तरावधि [உத்தராவதி]யாயிருந்து 3 पुराण-प्रसिद्ध[புராண ப்ரஸித்த]மாய் ईश्वर[ஈச்வர]ன் தன்னைப் போல स्वरूप-गुण-विभूति प्रभाव[ஸ்வரூப-குண-விபூதி ப்ரபாவ]ங்களாலுண்டான महत्व[மஹத்வ]த்தையுடைத்ததான திருமலையிலே.

------------------------------

*क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति ।एवं त्रयी धर्ममनुप्रपन्ना,* ***गतागतं कामकामा लभन्ते*** [தே தம் புக்த்வா ஸ்வர்க்கலோகம் விசாலம், க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி | ஏவம் த்ரயீதர்மமநுப்ரபந்நா **கதாதம் காமகாமா லபந்தே**] *(गीता – 9.21 - போய்த் திரும்பும் உலகங்களை அடைகின்றனர்; 1. பாகவதர்கள் அவதரிக்கத் தகுந்த; 2. அகஸ்த்யமுநி செப்பனிட்ட தமிழ் மொழி வழங்கப்படும் நாட்டிற்கு; 3. வட / உயர்ந்த எல்லையாய்;*

------------------------------------------------------------

(भागवत संभावனை . . .பாஷா தேச) – कलौ खलु भविष्यन्ति नारायण परायणा: । क्वचित् क्वचित् महाभागा: द्रमिडेषु च भूरिश: ॥ ताम्रपर्णी नदी यत्र कृतमाला पयस्विनी । कावेरी च महाभागा प्रतीची च महानदी [கலௌ கலு பவிஷ்யந்தி நாராயண பராயணா: | க்வசித் க்வசித் மஹாபாகா: த்ரமிடேஷு ச பூரிச: || தாம்ப்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ | காவேரீ ச மஹாபாகா ப்ரதீசீ ச மஹாநதீ [கலியில், நாராயணனையே உபாஸிக்கும் சிலர் ஆழ்வார்கள் த்ராவிடத்தில் அவதரிப்பர்; அந்த நதிக்கரைகளாவன : தாம்ரபர்ணீ ***(நம்மாழ்வார்/ மதுரகவிகள்),*** வைகை ***(பெரியாழ்வார்/ ஆண்டாள்)/*** பாலாறு ***(முதலாழ்வார் மூவர், மழிசைப்பிரான், பாஷ்யகாரர்),*** காவிரி ***(பாணன், தொண்ட ரடிப்பொடி, மங்கைமன்னன்)/*** மேற்கே ஓடும் பெரியாறு ***(குலசேகரன்).***

(ईश्वरன்தன்னைப் போல) - *वेङ्कटाद्रि समं स्थानं ब्रह्माण्डे नास्ति किञ्चन । वेङ्कटेश समो देवो न भूतो न भविष्यति* [வேங்கடாத்ரி ஸமம் ஸ்தாநம் ப்ரஹ்மாண்டே நாஸ்தி கிஞ்சந | வேங்கடேச ஸமோதேவோ ந பூதோ ந பவிஷ்யதி] [திருமலைக்கு ஸமமான இடமோ, வேங்கடேசனுக்கு ஸமமான தேவதையோ, அண்டத்தில் முன்பும் இல்லை, இனியும் ஏற்படப்போவதில்லை]

**வா**னவர்கள் சந்திசெய்ய நின்றான்) – परमपद [பரமபத]த்திலே कैङ्कर्य साम्राज्य[கைங்கர்ய ஸாம்ராஜ்ய]த்திற்கு अधि-कृत[அதிக்ருத]ரான 1 मुक्त[முக்த]ரும் नित्य[நித்ய]ரும் देशो-चित [தேசோசித]மான 2 देह[தேஹ]ங்களைக் கொண்டு उचित [உசித]மான कैङ्कर्य[கைங்கர்ய]த்தைப் பண்ணி, இவர்கள் आश्रयि [ஆச்ரயி]க்கைக்கு उद्देश्य [உத்தேச்ய]னாய் நின்றான்.

**அ**ரங்கத்தரவின் அணையான்)–ஏற்றமுள்ளளவும் ஏற வேண்டும்படியான திருமலையாழ்வாரும் परमपद स्थानीय[பரமபதஸ்தாநீய]ம் 3 என்னும்படி; எளிதாகக் கிட்டலாம் படியான கோயிலாழ்வாருக்குள்ளே, 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்யும்' 4 வானவர்களுக்கு படிமாவாய் 5, निश्शेष-जगदाधार-गुरु [நிச்சேஷ ஜகதாதார குரு]வான 6 தன்னை धरि[தரி]க்கைக்கு ஈடான ज्ञान-बलप्रकर्ष [ஜ்ஞாந பலப்ரகர்ஷ]த்தை 7 உடையனாய் सुरभि-सुकुमार-

---

*1 உரிமையுள்ள; 2. இடத்திற்கேற்ற; 3. அணுக அரிதான பரமபதம் போல; 4. எல்லாக் கால-இட-நிலைகளிலும் பகவானுடன் கூடியிருந்து 'நான் செய்கிறேன்-எனக்காக செய்கிறேன்' என்ற குற்றமற எல்லாக் கைங்கர்யங்களையும் செய்யவேணும் (திருவாய் 3.3.1); 5. உபமானமாய்; 6. முழு மூவுலகைத் தாங்குவதற்கேற்ற பளுவுள்ள; 7. உயர்ந்த ஜ்ஞாநம்-பலம் பெற்ற;*

---

(महत्वத்தையுடைத்ததான திருமலை) – ". . . கடுவினையர் இருவினையும் கடியும் வெற்பு, திண்ணமிது வீடென்னத் திகழும் வெற்பு . . . புண்ணியத்தின் புகலிதென்ன புகழும் வெற்பு, பொன்னுலகில் போக மெல்லாம் புணர்க்கும் வெற்பு, விண்ணவரும் மண்ணவரும் விரும்பும் வெற்பு . ." (அதி.ஸங். 43) என ஸ்வாமி தேசிகன், எம்பெருமானின் குணங்கள் திருமலைக்கும் இருப்பதை அநுபவிக்கிறார்.

शीतळ[ஸுரபி-ஸுகுமார-சீதள]முமான 1 திருவரவணையிலே 2 கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாளுடைய.

அந்திபோல் நிறத்தாடையும்) – आश्रित[ஆச்ரித]ருடைய अज्ञानान्धकार [அஜ்ஞாநாந்தகார]த்தைக் 3 கழிக்கவல்ல सम्यक्-ज्ञान सूर्योदय[ஸம்யக் ஜ்ஞாந ஸூர்யோ தய]த்திற்கு पूर्वसन्ध्यै....

-----------------------------

*1 மணம்-மென்மை-குளிர்ச்சியுடைய; 2. திருப்பாம்பணையிலே; 3. அஜ்ஞான இருள்;*

--------------------------------------------------------------------------------

(திருவரவணையிலே) - பகவத்-கைங்கர்யத்துக்கு உபமான பூமியாக திருவனந்தாழ்வானைக் கூறுவர் – "சென்றால் குடையாம் இருந்தால் சிங்கா ஸனமாம்• நின்றால் மரவடியாம் நீள் கடலுள்• என்றும் புணையாம் மணி விளக்காம் பூம்பட்டாம் புல்கும் அணையாம்• திரு மாற்கு அரவு" (முதல் திருவந்தாதி 53) – என்றதை அநுஸந்திக்கவும்.

स विभ्रच्छेखरीभूतं अशेषं क्षितिमण्डलम् [ஸ பிப்ரச்சேகரீபூதம் அசேஷம் க்ஷிதிமண்டலம்] (வி.பு 2.5.22 – அந்த சேஷன் பூமண்டலம் முழுவதையும் கொண்டைபோல் சுமக்கிறான்)

-फणिपति शब्देन सुरभि-सुकुमार-शीतळ-विशाल-उन्नतत्वादि रूपा: पर्यङ्क गुणा व्यज्यन्ते [பணிபதி சப்தேந ஸுரபி-ஸுகுமார- சீதள- விசால-உந்நதத்வாதி ரூபா: பர்யங்ககுணா வ்யஜ்யந்தே] (रहस्यरक्षा-चतुश्श्लोकी अध्याय:[ரஹஸ்ய ரக்ஷா-சதுச்ச்லோகீ அத்யாய:]- 'பணிபதி' என்ற சொல்லினால், படுக்கையின் குணங்களான வாஸனை/ ம்ருதுத்தன்மை/ குளுமை/ அகன்றமை/ உயர்ந்தமை என்பவைகள் குறிக்கப்பட்டன.)

(அந்திபோல் நிறத்தாடையும்) - இரண்டாம் பாட்டிலேயே, 'அரைச் சிவந்த ஆடையின் மேல் சென்றதாம் என் சிந்தனையே' என அநுபவித்த ஆழ்வார், மறுபடியும் 'அந்திபோல் நிறத்தாடையை' ஸ்தோத்ரம் செய்வானேன்? என்பதற்கு: 'இங்கு மேலே அநுபவிக்கப்புகும் திருவுந்தியின் அழகுக்கு ஈடாய் நிற்கும் ப்ரகாசத்தை உடைய – அதற்கு கரை கட்டினாற்போலே இருக்கும் – ஆடையின் ஸௌந்தர்யத்தை' மறுபடி அநுவதிக்கிறார், என்கிறார்.

[பூர்வ ஸந்த்யை] 1 போலவும், அவர்களுடைய तापत्रय[தாபத்ரய] ங்களைக் 2 கழிக்கைக்கு पश्चिम सन्ध्यै[பச்சிம ஸந்த்யை] 3 போல வும், புகர்ந்த நிறத்தையுடையதான செவ்வரத்தவுடை யாடையும். இது மேலில் अनु-भाव्य[அநுபாவ்ய]த்தை अवलम्बि [அவலம்பி]க்கைக்கு 5 अनु-भूतांश[அநுபூதாம்ச]த்தை अनुवदि[அநுவதி] த்தபடி 4.

மேல் अनुभाव्य [அநுபாவ்ய]ம் ஏதென்ன, (அதன் மேல் அயனைப் படைத்ததோரெழில் உந்தி) – மேல் அயனைப் படைத்ததோரெழில் உந்தி) – अनुभूत[அநுபூத] மான திருப்பீதாம்பரத்திற்கு மேலாய், இதன் நிறத்திற்கு நிகரான சிவந்த தாமரைப் பூவையுடைத்தாய், அதின் மேலே व्यष्टि-सृष्टि[வ்யஷ்டி ச்ருஷ்டி] 5 समय[ஸமய]த்திலே முற்பட अयोनिज[அயோநிஜ]னான 6 ब्रह्मा[ப்ரஹ்மா]வை सृष्टि[ச்ருஷ்டி]த்த अद्वितीय[அத்விதீய]மான அழகையுடைத்தான திருவுந்தி. ब्रह्मा [ப்ரஹ்மா]வினுடைய सृज्यत्व[ஸ்ருஜ்யத்வ]ம் 7 சொல்ல, कैमुतिक न्याय [கைமுதிக ந்யாய] 8 த்தாலே रुद्रेन्द्रादि [ருத்ரேந்ராதி]களுடைய

------------------------------

*1. நல் ஜ்ஞானமாம் ஸூர்யோதயத்திற்கு விடியலாய்; 2. ஆத்யாத்மிக-ஆதி பௌதிக -ஆதி தைவிக துன்பங்களை; 3. அந்திப் பொழுதாய்;5. சார்வதற்கு; 4. அநுபவித்த பகுதியை மறு-மொழிந்தபடி; 5. அண்டங்களைப் படைத்தபின் பிரம னைப் படைப்பது; 6. தாயின் வயிற்றில் பிறவாத; 7. படைக்கப்படுகை; 8 பெரிய விஷயத்தைச் சொன்னபின், "சிறியதைச் சொல்லத் தேவையா?" என்பது.*

------------------------------------------------------------

(ब्रह्मावै सृष्टित्त . . . சொல்லிற்றாம்) – "நான்முகனை நாராயணன் படைத்தான், நான்முகனும் தான் முகமாய் சங்கரனைத் தான் படைத்தான" (நா. தி 1) – என்றதை அநுஸந்திக்கவும்.

सृज्यत्व[ஸ்ருஜ்யத்வ]ம் சொல்லிற்றாம். இத்தாலே, प्रतिबुद्ध[ப்ரதி புத்த]ர்க்கு 1 श्रिय: पति[ச்ரிய:பதி]யையொழிய शरण्यान्तर[சரண்யாந் தர]மும் प्राप्यान्तर[ப்ராப்யாந்தர]மும் 2 இல்லை என்பதாயிற்று. இங்கு ब्रह्मा[ப்ரஹ்மா]வைச் சொன்னது मुमुक्षु[முமுக்ஷு]க்களை सृष्टि [ஸ்ருஷ்டி]த்தउपकार[உபகார]த்திற்குउदाहरण[உதாஹரண]முமாகிறது.

மேலதன்றோ) – என்றது இத்திருவுந்தியையே अनुभाव्य[அநுபாவ்ய]மாகக் கொண்டன்றோ இருக்கின்றது என்னவுமாம். இதனுடைய अनुभव[அநுபவ]ம் இது இட்ட வழக்காயிருக்கிறது என்னவுமாம்.

அடியேனுள்ளத்தின்னுயிரே)– आत्म दास्यं हरे: स्वाम्यं स्वभावं च सदा स्मर [ஆத்ம தாஸ்யம் ஹரே: ஸ்வாம்யம் ஸ்வபாவம் ச ஸதா ஸ்மர] 3 என்கிறபடியே परम-कारुणिक-कटाक्ष[பரம-காருணிக-

---

*1. நல்லறிவுள்ளோர்; 2. வேறு உபாயமும்-பலனும்; 3. स्वोज्जीवनेच्छा यदि ते स्व सत्तायां स्पृहा यदि ।* आत्म दास्यं हरे: स्वाम्यं स्वभावं च सदा स्मर (वि.त – *ஆத்மாவின் தாஸத்வம்/ ஹரியின் ஸ்வாமித்வம்-ஸ்வபாவம் இவைகளை எப்போதும் நினை);*

---

(प्रतिबुद्धர்க்கு) – ब्रह्माणं शितिकण्ठं च याश्चान्या देवतास्स्मृता: । प्रतिबुद्धा: न सेवन्ते यस्मात् परिमितं फलम् [ப்ரஹ்மாணம் சிதிகண்டம் ச யாச்சாந்யா தைவதாஸ்ஸ்ம்ருதா: | ப்ரதிபுத்தா: ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் பலம்] (பார – நான்முகனையோ, முக்கண்ணனையோ, மற்றும் தெய்வங்கள என்று எண்ணப்படுபவர்களையோ, தத்வஜ்ஞாநமுடையவர்கள் ஸேவிப்பதில்லை; ஏனென்றால், அவர்கள் அளிக்கும் பலன் மிகவும் அளவுபட்டது.)

(ब्रह्माவைச்சொன்னது) – எம்பெருமானைச் சொல்லவந்த இடத்தில், அவனுக்குக் கீழ்ப்படிந்த ப்ரஹ்மாவைச் சொல்லுவானேன்? என்ன, "அவன் சருஷ்டிக்கும்போது, ஆழ்வார் போன்று மோக்ஷத்தில் ஆசையுள்ளவர்களையும் படைத்தான்" என்ற உபகாரத்தை நினைவுகூறுகிறார்.

கடாக்ஷ]த்தாலே स्वभाव-दास्य-प्रतिबोध[ப்ரகாசி]க்கிற 1 स्वादुतम [ஸ்வாதுதம]மான என் आत्मस्वरूप[ஆத்ம ஸ்வரூப]ம். 'உள்ளம்' என்று हृदयप्रदेश[ஹ்ருதய ப்ரதேச]த்தைச் சொல்லவுமாம்; 'இன் னுயிர்'என்று भगवदनुभव [பகவதநுபவ]த்திற்கு अनुरूप[அநுரூப] மாகையாலே இனிதான प्राणादि[ப்ராணாதி]களைச் சொல்லவு மாம். **ज्ञानी तु परमैकान्ती परायत्त आत्मजीवनः** 2; **मच्चित्ता मद्गत प्राणाः** 3 इत्यादि[இத்யாதி]களை இங்கே अनुसन्धि[அநுஸந்தி]ப்பது.

-----------------------------

*1. இயல்பான அடிமைத்தனத்தை உணர்ந்து; 2.* **ज्ञानी तु परमैकान्ती परायत्त आत्मजीवनः** | *तत्संश्लेष वियोगैक सुख दुःखस्तदेक धीः* [**ஜ்ஞாநீ து பரமைகாந்தீ பராயத்த ஆத்மஜீவந:** | தத் ஸம்ச்லேஷ வியோகைக ஸுகது:கஸ்த்தேக தீ:] (गीता.सं 29 – *பரமைகாந்தியான ஜ்ஞாநி, பகவானையே வாழ்வாகவும், அவனுடன் கூடுவதையே இன்பமாகவும்/ பிரிவையே துக்கமாகவும் கொண்ட உள்ளத்தினன்*); *3.* **मच्चित्ता मद्गतप्राणाः** *बोधयन्तः परस्परम् । कथयन्तश्च मां नित्यं तुष्यन्ति च रमन्ति च* [**மச்சித்தா மத்கதப்ராணா:** போதயந்த: பரஸ்பரம் | கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச] (गीता 10.9 – *என்னிடமே மனதைச் செலுத்தியவராயும், என்னால் உயிர் தரிப்பவராயும்* );

oooo 0 oooo

இ <u>ரண்டாம் பாட்டாலும், மூன்றாம் பாட்டாலும்</u> ब्रह्म-रुद्रादि[ப்ரஹ்மாதி]களுடைய कर्माधिकारित्व[கர்மாதிகாரத்வ] 1 மும் कर्ममूल जन्मादि[கர்மமூலத்வ ஜந்மாதி]களும் 2 சொல்லிற்றா யிற்று. நாலாம்பாட்டாலே, ब्रह्म-रुद्रादि[ப்ரஹ்ம-ருத்ராதி]கள் வரம் கொடுத்து வாழ்வித்த இராவணனை நிராகரித்த वृत्तान्त[வ்ருத்தாந்த]த்தாலும், देवतान्तर[தேவதாந்தர]ங்களுடைய क्षुद्र[க்ஷுத்ர]த்தையும், **ब्रह्मा स्वयंभू श्चतुराननो वा रुद्रस्त्रिनेत्रः** 3 इत्यादि[இத்யாதி]களிற்படியே அவர்களுடைய अल्पशक्तित्व[அல்ப சக்தித்வ]த்தையும் अनुसन्धि[அநுஸந்தி]த்துக்கொண்டு ब्रह्मादि [ப்ரஹ்மாதி]களை யெல்லாம் அகம்படியிலே வைத்து உய்யக் கொண்ட श्रीमत्[ஶ்ரீமத்]தையே உடைத்தான திருவயிற்றினு டைய சிறுமை பெருமைகளாலுண்டான अघटित- घटनाशक्ति க்கு 4 அடையவளைந்தான்போலே 5 இருக்கிற उदर-बन्ध [உதர பந்த]ம் 6 தம்முடைய சிறிய திருவுள்ளத்திற்குள்ளே....

------------------------------

*1. வினைப் பயனை அநுபவிக்கும் இயல்பு; 2. வினைப் பயனாய் பிறப்பு முதலி யவைகளும்; 3.* ***ब्रह्मा स्वयंभूश्चतुराननो वा रुद्रस्त्रिनेत्रः*** *त्रिपुरान्तको वा । इन्द्रो महेन्द्रः सुरनायको वा त्रातुं न शक्ता युधि रामवध्यम्* **[ப்ரஹ்மா ஸ்வயம்பூ: சதுராநநோ வா ருத்ரஸ்த்ரிநேத்ர:** த்ரிபுராந்தகோ வா | இந்த்ரோ மஹேந்த்ர: ஸுரநாயகோ வா த்ராதும் ந சக்தா யுதி ராமவத்யம்](रामा 5.51.45– ஜீவனால் படைக்கப்படாத நான்முகனோ, முக்கண்ணனோ); *4.சேராததைச் சேர்க்கும்திறன்; 5.சூழ்ந்த மதிள்; 6. ஒட்டியாணம்;*

------------------------------------------------------------------------

(இரண்டாம் பாட்டாலும், மூன்றாம் பாட்டாலும்) – இரண்டாம் பாட் டில், 'உலகமளந்து' என்றதால், அளப்பவன் ஸ்வாமி என்றும், அளக்கப்படுபவை அவனுக்கு அடங்கி கர்மவச்யர்களாயிருப்பர் என்றும்; மூன்றாம் பாட்டில், 'அயனைப்படைத்த' என்றது, ப்ரஹ்மாதிகள் கர்மத்தின் அடிப்படையில் பிறப்பு முதலானவைகளுக்கு உட்பட்டவர் என்று சப்தமாகவும், சொல்லப்படுகிறது.

வெளியிற்போலே இடங்கொண்டு உலாவா நின்றது. இது ஒரு आश्चर्य[ஆச்சர்ய] மென்கிறார்.

கீழ் மூன்று பாட்டாலும் प्रथम-पदार्थ-प्रतिष्ठित [ப்ரதம-பதார்த்த-ப்ரதிஷ்டித]மாய் 1, நாலாம் பாட்டாலே **न नमेयं तु कस्यचित्** 2 என்ற வணங்கலிலரக்கனைத் தலை சாய்த்து, **दशेन्द्रियाननं घोरं** 3 என்கிறபடி मुमुक्षु[முமுக்ஷு]க்களுடைய मनस्[மநஸ்]ஸு अहङ्कार-ममकार-दूषित[தூஷித]மாகாதபடி4 பண்ணிக் கொடுக்கிற चक्रवर्ति[சக்ரவர்த்தி]த் திருமகனுடைய चरित्र[சரித்ர]த்தை முன்னிட்டு, 'நானும் என்னுடையதன்று; மற்றும் என்னுடையது ஆவன ஒன்றுமில்லை' என்கிற नमस्[நமஸ்]ஸில் अर्थ[அர்த்த]த்தை மறைபொருளாக अनुसन्धि[அநுஸந்தி]க்கிறாராகவுமாம்.

***சதிர மாமதிள் சூழ் இலங்கைக்கிறைவன் தலைபத்து***
***உதிரவோட்டி* ஓர் வெங்கணை உய்த்தவன் ஓதவண்ணன்****
***மதுரமா வண்டுபாட மாமயிலாட அரங்கத்தம்மான்* திருவயிற்று***
***உதரபந்தம் என்னுள்ளத்துள் நின்று உலாகின்றதே (4)***

-----------------------------

*1. ப்ரணவத்தின் பொருள் நிலை நாட்டப்பட்டது; 2. द्विधा भज्येयमप्येवं* ***न नमेयं तु कस्यचित्*** *। एष मे सहजो दोषः स्वभावो दुरतिक्रमः* [த்விதா பஜ்யேயமப்யேவம் ந நமேயம் து கஸ்யசித் | ஏஷ மே ஸஹஜோ தோஷ: ஸ்வபவோ துரதிக்ரம:] *(रामा 6.36.11 – நான் ஒருபோதும் தலை வணங்கேன்); 3.* ***दशेन्द्रियाननं घोरं*** *यो मनो रजनीचरम् । विवेक शरजालेन शमं नयति योगिनाम्* [தசேந்த்ரியாநநம் கோரம் யோ மநோ ரஜநீசரம் | விவேக சரஜாலேந சமம் நயதி யோகிநாம்] *(सात्. सं 12.51 – பத்து இந்த்ரியங்களாகிற பத்து முகங்களை உடையது); 4. அஹங்கார-மமகாரங்களால் கலக்கப்படாமல்;*

சதிர மாமதிள் சூழ் இலங்கைக்கிறைவன் தலை பத்து உதிர) – कुलपर्वत[குலபர்வத]ங்களைச் சேர்த்து இசைத் தாற்போலே செறிவும் 1, திண்மையும் 2, உயர்த்தியும் உடைத்தாய், எட்டு திக்குகளிலுள்ள दिक्पाल[திக்பால]ர் களுக்கும் எட்டிப்பார்க்கவொண்ணாதிருக்கிற மதிள்க ளாலே இத்தவிடம் 3 முறிந்தவிடமில்லாதபடி, எங்கும் ஒக்க சூழப்பட்டு जलदुर्ग-गिरिदुर्ग-वनदुर्ग[ஜலதுர்க்க-கிரிதுர்க்க-வந துர்க்க]ங்களாலே दुर्ग[துர்க்க]ங்களுக்கெல்லாம் उपमान[உபமாந] மாம்படி प्रसिद्ध[ப்ரஸித்த]மான लङ्कै[லங்கை]க்கு ईश्वर[ஈச்வர] னாய், दुर्ग बल-वरवल-भुजबल-सैन्यबल[துர்க்கபல- வரபல- புஜபல்- ஸைந்யபல]ங்களாலே செருக்கனாய், माल्यवान्-अकम्पन [மால்ய வாந்- அகம்பந]ன்-मारीच[மாரீச]ன் முதலான राक्षस[ராக்ஷஸ]ரோடு हनुमान्-विभीषण[ஹநுமாந்-விபீஷண]ன் முதலான सत्व-प्रकृति [ஸத்வ ப்ரக்ருதி]களோடு வாசியற अविगीत[அவிகீத]மாகப் 4 பேசப் பட்ட பெருமாள் பெருமையை அறிந்து வைத்தும், கண்டு மதி கெட்டான் படியே **तेन मैत्री भवतु ते यदि जीवितुं इच्छति** 5, என்ற தாய் வாய்ச் சொல்லும் கேளாதே, **अराक्षसमिमं लोकं कर्ताऽस्मि निशितैः शरैः । न चेत् शरणं अभ्येषि मामुपादाय मैथिलीम्** **[அராக்ஷஸமிமம் லோகம் கர்த்தாஸ்மி நிசிதை: சரை: | ந சேத் சரணம் அப்யேஷி மாமுபாதாய மைதிலீம்]** 6 என்று பெருமாள் அருளிச் செய்து

-----------------------------

*1. அடர்த்தி; 2. உறுதி; 3.பழுதடைந்த இடம்; 4. விதயாஸமின்றி; 5.विदितः स हि धर्मज्ञः शरणागत वत्सलः ।* **तेन मैत्री भवतु ते यदि जीवितुं इच्छति** [விதித: ஸ ஹி தர்மஜ்ஞ: சரணாகத வத்ஸல: | **தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதும் இச்சதி]** *(ராமா 5.21.20) நீ உயிர்வாழ விரும்பினால் ராமனுடன் நட்பை நாடு; 6. ஸீதையை ஒப்படைத்துவிட்டு, சரண மடையாவிடில், கூரிய பாணங்களால் உலகில் அரக்கர்கள் இல்லாமல் செய்துவிடுவேன் (ராமா 6.41.66);*

விட்ட परमहित[பரமஹித]மான பாசுரத்தையும் अनादरि[அநாதரி]த்து 1, அடைகோட்டைப்பட்ட அளவிலும், பூசலுக்கு 2 புறப்படவிட்ட महाबल[மஹாபல]ரான படைமுதலிகள் எல்லாரையும் படக்கொடுத்து, தான்ஏறிப்பொருதவன்று 3 रिपूणामपि वत्सल[ரிபூணாமபி வத்ஸல]ரான 4 பெருமாள் சரச் செருக்கு வாட்டி, 'நம்முடனே பொருதும்படி இளைப்பாறி நாளை வா' என்று விட, நாணாதே போய் மண்டோதரி முதலான பெண்கள் முகத்திலே விழித்து, தன்னிற்பெரிய தம்பியையும்-மகனையும் படக்கொடுத்து, தான் சாவேறாக 5 வந்து, प्रतिहत सर्वास्त्र[ப்ரதிஹத ஸர்வாஸ்த்ர]னான 6 பின்பும் சினம் தீராதே சேவகப் பிச்சு ஏறி நின்ற ராவணனை, 'இனி தலை யறுக்குமது ஒழிய வேறொரு परिहार[பரிஹார] மில்லை' என்று திருவுள்ளம்பற்றி, ஒருதலைவிழ வேறு ஒரு தலை கிளைக்க, முன்பு பண்ணின चित्रवध-प्रकार[சித்ரவத ப்ரகார] 7 மன்றிக்கே ஒருக்காலே பத்துத் தலையும் உதிரும்படியாக.

ஓர் வெங்கணையுய்த்தவன்) – 'தானேபோய் रावण[ராவண]ன் தலைபத்தும் கைக்கொள்ளவேணும்' என்று சினமுடைத்தாய், अद्वितीय[அத்விதீய]மாயிருப்பதொரு திருச்...

----------------------------

*1. கேட்காமல்; 2. யுத்தத்திற்கு; 3. சண்டையிட்டபோது; 4. எதிரியிடமும் வாத்ஸல்யமுடைய; 5. சாவுக்குத் துணிந்து, 6. எல்லா அஸ்த்ரங்களையும இழந்து; 7 சித்ரவதையை;*

----------------------------

(பத்துத் தலையும் உதிரும் படியாக) – 'உத்தம வமர்த்தலம் அமைத்த தோர் எழில் தனுவின் உய்த்த கணையால், அத்திர வரக்கன் முடி பத்தும் ஒருகொத்தென உதிர்த்த திறலோன் .' (அதி.ஸ 43) என்பதை அநுஸந்திக்கவும்.

சரத்தைத் தகையாதே ஓடவிட்டு இரை போர்ந்த இலக்குப் பெறுகையாலே, அத்திருச்சரத்தை உய்யப் பண்ணினவன். சரத்தினுடைய आशुकारित्व [ஆசுகாரித்வ]த்தாலும் 1 रावण[ராவண]னுடைய धैर्य[தைர்ய]த்தாலும் தலை பத்து உதிர்ந்த பின்னும், அவன் உடல் கட்டைப்பனைபோலே சிறிது போது இருந்து நிற்கும்படியாயிருந்தது. 'தலை பத்து உதிர ஓட்டி' என்றது, முன்னில் பூசலிலே रावण[ராவண]னைத் தலை சாய்த்து **गच्छ अनुजानामि** 2 என்று துரத்தி விட்டபடியாய், 'ஓர் வெங்கணையுய்த்தவன்' என்றது, பின்பு அவனுடைய वधार्थ[வதார்த்த]மாக अद्वितीय[அத்விதீய]மான अस्त्र[அஸ்த்ர]த்தை விட்டவன் என்னவுமாம்.

ஓத வண்ணன்) – கண்டவர்களுடைய पाप[பாப]த்தையும் ताप[தாப]த்தையும் கழிக்கவற்றாம் समुद्रं[ஸமுத்ரம்] போலே श्यामल[ச்யாமள]மான திருமேனியை உடையவன்.

-----------------------------

*1. வேகத்திறன்; 2. **गच्छ अनुजानामि** रणार्दितस्त्वं प्रविश्य रात्रिंचरराज लङ्काम् । आश्वास्य निर्याहि रथी च धन्वी तदा बलं द्रक्ष्यसि मे रथस्थः* [**கச்ச அநுஜாநாமி** ரணார்த்திதஸ்த்வம் ப்ரவிச்ய ராத்ரிம்சரராஜ லங்காம் | ஆச்வாஸ்ய நிர்யாஹி ரதீ ச தந்வீ ததா பலம் த்ரக்ஷ்யஸி மே ரதஸ்த:] ] *(ராவணனிடம் ராமன் சொன்னது. ராமா 6.41.66 – நீ திரும்பிப் போக அநுமதிக்கிறேன் );*

-------------------------------------------------------------------

(இரைபோர்ந்த இலக்குப் பெறுகையாலே) – स शरो रावणं हत्वा रुधिरार्द्रकृतच्छविः । कृतकर्मा निभृतवत् स तूणीं पुनराविशत् [ஸ சரோ ராவணம் ஹத்வா ருதிரார்த்ரக்ருதச்சவி: | க்ருதகர்மா நிப்ருத்வத் ஸ தூணீம் புநராவிசத்] ( रा 6.108.20 – ராவணனைக் கொன்றுவிட்டு, ருதிரத்தால் நனைந்தவாறு, கார்யத்தை திறம்படசெய்துவிட்டதாக அந்த சரம் பழையபடி ராமனின் அம்பராத் துணியை வந்தடைந்தது.

**ம**துரமா வண்டுபாட மாமயிலாட அரங்கத்தம்மான்) – रावणवध[ராவண வத]ம் பண்ணின वीरलक्ष्मी [வீரலக்ஷ்மீ] யுடனே நின்ற அழகைக்கண்டு ब्रह्मादि [ப்ரஹ்மாதி]கள் स्तोत्रं [ஸ்தோத்ரம்]பண்ண, अप्सरस्[அப்ஸரஸ்] ஸு³கள் मङ्गल-नृत्तं[மங்கள ந்ருத்தம்]பண்ணினாற்போலே, **आत्मानं मानुषं मन्ये** 1 என்கிற பெருமாளுடைய भूमिकै[பூமிகை]க்கு 2 अनुरूप[அநுரூப]மாக मुक्त [முக்த]ரும் नित्य[நித்ய]ரும் रूपान्तर[ரூபாந்தர]ம் 3 கொண்டு வந்தார் கள் என்னலாம்படி अतिमधुर[அதி மதுர]ங்களாய் ज्ञानादि गुणमह [ஜ்ஞாநாதி குணமஹ]த்தையுமுடையவையான வண்டுகள் காலப் பண்கள்பாட, பாட்டுக்கு अनुरूप[அநுரூப]மாக गुणाधिक [குணாதிக]ங்களான नीलकण्ठ[நீல கண்ட]ங்கள் 4 नृत्तं[ந்ருத்தம்] பண்ண, இக்गीत-नृत्त[கீத-ந்ருத்த]ங்களாலே मङ्गलोत्तर[மங்களோ த்தர]மான கோயிலாழ்வாருக்குள்ளே सर्वाधिपति[ஸர்வாதிபதி] யானபடி 5 தோற்றக் கண்வளர்ந்தருளுகிற பெரிய பெரு மாளுடைய.

**தி**ருவயிற்று உதரபந்தம் என்னுள்ளத்துள் நின்று உலாகின்றதே) – **दामोदरं बन्ध गतं** [தாமோதரம் பந்த கதம்] 6 என்கிறபடியே बन्धगत[பந்த கத]ர்க்கு 7 मोक्षहेतु[மோக்ஷஹேது]வான

-----------------------------

*1. (ப்ரஹ்மாவிடம் ராமன் வார்த்தை -* **आत्मानं मानुषं मन्ये** *रामं दशरथात्मजम् । सोहं यश्चे यतश्चाहं भगवांस्तद्ब्रवीतु मे* **[ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம் | ஸோயம் யச்சே யதச்சாஹம் பகவாம்ஸ்த்த் ப்ரவீது மே]** - *ராமா 6.117.11 – என்னை தசரதருடைய மகனான மனிதனாகவே எண்ணு கிறேன்; நான் யார்/எதற்காக என்பதை நீர்தான் சொல்லவேணும்); 2. மாறு வேஷத்திற்கு; 3. வேறு உருவம்; 4 மயில்கள்; 5. எல்லாவற்றிற்கும் தலைவன். 6 கட்டுண்ட தாமோதரனை; 7 பத்தருக்கு;*

दामोदरत्व[தாமோதரத்வ]த்தை வெளியிடா நின்ற திருவயிற்றில் ‘திருவுதரபந்தம்’ என்று திருநாமத்தை உடைத்தான திரு வாபரணம், अतिक्षुद्र[அதிக்ஷுத்ர]னான 1 என்னுடைய अतिराग -दूषित[அதிராக தூஷித]மான 2 हृदय[ஹ்ருதய]த்தினுள்ளே, அதுவே निवास-भूमि[நிவாஸ பூமி] 3 என்னும்படி நின்று, அளவற்ற भोग्यता- प्रकाशन- व्यापार [போக்யதா-ப்ரகாசந-வ்யாபார]ங்களைப் 4 பண்ணாநின்றது. இது திருமந்த்ரத்திலும் திருமேனியிலும் मध्य[மத்ய]த்திலே வரும் अनुभव [அநுபவ]ம்.

-----------------------------

*1. மிகவும் அல்பமான; 2. சிற்றின்பத்தால் கலங்கிய; 3. இருக்கும் இடம்; 4. போகமளிக்கும் செயலை;*

oooo 0 oooo

மேலிரண்டு பாட்டால் नारायणशब्दार्थ[நாராயண சப்தார்த்த]முள்ளீடாக பெரியபிராட்டியாருடைய निवास[நிவாஸ]த்தால் நிகரில்லாத, திருமார்பையும் திருக் கழுத்தையும் अनुभवि[அநுபவி]க்கிறார்.

***பாரமாய பழவினை பற்றறுத்து* என்னைத் தன்***
***வாரமாக்கி வைத்தான் வைத்ததன்றி என்னுள் புகுந்தான்****
***கோர மாதவம் செய்தனன்கொல் அறியேன் அரங்கத்தம்மான்* திரு***
***வார மார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டதே** (5)*

பாரமாய பழவினை பற்றறுத்து) – காலतत्व[கால தத்வ]முள்ளதனையும் प्रायश्चित्त[ப்ராயச்சித்த]ம் பண்ணினாலும் கழிக்கவொண்ணாதபடி उपचित[உபசித]மாய்க் 1 கொண்டு, अनादिकालं[அநாதி காலம்] நடக்கிற सांसारिक-कर्म-कलाप[ஸாம்ஸாரிக கர்ம கலாப]த்தை 2 सवासन [ஸவாஸந]மாக 3 என்னுடன் துவக்கறுத்து.

என்னைத் தன் வாரமாக்கி வைத்தான்)- இப்படி कर्मपरवश [கர்மபரவச] னாய், इन्द्रिय- किङ्कर [இந்த்ரிய கிங்கர] னாய், तादृश [தாத்ருச]ரான 4 इन्द्रादि[இந்த்ராதி]களை எடுத்துச்...

------------------------------

1. *சேர்த்துக்கொண்டு; 2. உலகில் கைக்கொண்ட கர்மத்தின் கூட்டத்தை; 3. வாஸனையோடுகூட; 4. அதற்கு ஸமமான;*

---

(காலதத்வமுள்ளதனையும் ..... கழிக்கவொண்ணாதபடி) – *यद्ब्रह्मकल्प नियुतानुभवेऽप्यनाश्यं तत् किल्बिषं सृजति जन्तुरिह क्षणार्धे* [யத் ப்ரஹ்மகல்ப நியுதாநுபவே-ப்யநாச்யம் தத் கில்பிஷம் ஸ்ருஜதி ஜந்துரிஹ க்ஷணார்த்தே] (वैकु.स्त 61 – பத்தாயிரம் ப்ரஹ்மகல்ப காலம் அநுபவித்தாலும் கழிக்கமுடியாத பாபங்களை, இவ் வுலகில் பத்த ஜீவன் அரை நொடியில் செய்து விடுகிறான்)

சுமந்து, தனிசு தீராதே பொலிசை இறுத்துத் 1 திரிகிற என்னை, अपहत-पाप्मा[அபஹத பாப்மா]வாய் 2, स्वामि भाव [ஸ்வாமி பாவ]த்திற்கு எல்லை நிலமாய் सूरि भोग्य[ஸூரி போக்ய] னான தன்னுடைய अन्त:पुरस्त्री [அந்த: புரஸ்த்ரீ]களைப்போலே, अन्य[அந்ய]ர்க்குக் கூறு 3 இல்லாதபடிபண்ணி, असाधारण-कैङ्कर्यरस[அஸாதாராண கைங்கர்ய ரஸ]த்தை தந்து, மேல் ஒருக் காலத்திலும் மாறாதபடி வைத்தான்.

**வை** த்ததன்றி என்னுள் புகுந்தான்) – अनन्य [அனந்ய] னாக்கி வைத்தவளவு அன்றிக்கே, முன்பு प्रयोजनान्तर-प्रवण [ப்ரயோஜநாந்தர ப்ரவண]னான 4 என்னுடைய हृदय[ஹ்ருதய]த்திலே अनन्य-प्रयोजन-अनुभव-विषय[அனந்யப்ரயோஜந அநுபவ விஷய]மாய்க் கொண்டு, दस्यु-परि-गृहीत[தஸ்யு பரிக்ருஹீத] மான 5 தன் படைவீட்டிலே दस्यु[தஸ்யு]க்களை ஓட்டிப் புகுருமாப் போலே புகுந்தான்.

**கோ** ர மாதவம் செய்தனன்கொல் அறியேன்) – अनादि काल[அநாதிகால]ம் இழந்தवस्तु[வஸ்து]வை பெறுகைக்கு, अकर्मवश्य[அகர்மவச்ய]னான ईश्वर[ஈச்வர]ன்தானே अवतार-क्षेत्र[அவதாரக்ஷேத்ர]மான திருவயோத்தியையும் விட்டு, आश्रित [ஆச்ரித]ன் இருப்பிடமான लङ्कै[லங்கை]யிலும் போகாதே, गङ्गै[கங்கை]யில் புனிதமான कावेरी [காவேரீ] நடுவு பாட்டிலே

-----------------------------

*1. வட்டி மட்டும் செலுத்தும்; 2. பாபங்களைத் தொலைத்தவனாய்; 3. மற்ற வர்க்கு பாகம்; 4. வேறு பலத்தில் ஆசை; 5. திருடர்கள் புகுந்துகொண்ட;*

अतिघोर[அதிகோர]மாய் अतिमहत् [அதிமஹத்]தாய் இருப்பதொரு तपस्[தபஸ்]ஸைப் பண்ணினானோ அறிகிலேன். இது अतिवाद-गर्भ[அதி வாத கர்ப்ப]மாக उत्प्रेक्षि[உத்ப்ரேக்ஷி]த்தபடி 1. सर्व-संसार-निवर्तक[ஸர்வ-ஸம்ஸார நிவர்த்தக]மாய், अमोघ[அமோக]மாயிருப்பதொரு 'मोक्षयिष्यामि'[மோக்ஷயிஷ்யாமி]என்கிற सङ्कल्प-रूप[ஸங்கல்ப ரூப]மான तपस्[தபஸ்]ஸைப் பண்ணினான் என்று तात्पर्यम्[தாத்பர்யம்]. அங்ஙனன்றிக்கே, இப் பெரிய பேறு பெறுகைக்கு अयोग्य[அயோக்ய]னான நான், இதற்கு अनुरूप [அநுரூப]மாய் अमोघ[அமோக]மாய் 2 இருப்பதொரு महातपस् [மஹாதபஸ்]ஸைப் பண்ணிப் பெற்றேனல்லேன். இதற்கு **त्वयि निहित भरोऽस्मि सोऽहं यत:** 3 என்றும்; **तव भरोऽहम् अकारिषि धार्मिकै:** 4 என்றும் சொல்லுகிற இது ஒழிய, இப் போது நானும் பிறரும் அறியலாவது எனக்கு ஒரு <u>तपस् [தபஸ்]ஸு காண்கிறிலேன்</u> என்று, ईश्वर[ஈச்வர]னுடைய இரக்-

------------------------------

*1. மிகைப் படுத்தி ஊஹித்தபடி; 2. வீண்போகாத; 3. प्रियमितरदथापि वा यद्यथा वितरसि वरदप्रभो त्वं हि मे । तदनुभवनमेव युक्तं हि मे* ***त्वयि निहित भरोऽस्मि सोऽहं यत:*** [ப்ரியமிதர ததாபி வா யத்யதா விதரஸி வரதப்ரபோ த்வம் ஹி மே | ததநுபவநமேவ யுக்தம் ஹி மே **த்வயி நிஹித பரோஸ்மி ஸோஹம் யத:** ] (वरद. स्त 91 – *தேவரீரிடம் ஆத்ம-ரக்ஷாபரத்தை ஸமர்ப்பித்திருக்கிறேன்); 4.* ***तव भरोऽहमकारिषि धार्मिकै:*** *शरणमित्यपि वाचमुदैरिरम् । इति ससाक्षिकयन्निदमद्य मां कुरु भरं तव रङ्गधुरन्धर* [**தவ பரோஹம் அகாரிஷி தார்மிகை:** சரணமித்யபி வாசமுதைரிரம் | இதி ஸஸாக்ஷிகயந்நிதமத்ய மாம் குரு பரம் தவ ரங்க துரந்தர] (श्रीरङ्ग. स्त 2.102 – *ஆசார்யர்களால் நான் தேவரீருக்கு பரமாக ஸமர்ப்பிக்கப்பட்டேன்)* ;

------------------------------

(तपस्ஸு காண்கிறிலேன்) - குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன்• நலங்களாய நற்கலைகள் நாலிலும் நவின்றிலேன்• புலன்கள்

கத்தின் प्राधान्य[ப்ராதாந்ய]த்திலே तात्पर्य[தாத்பர்ய]மாகவுமாம்.

இப்படி, क्षुद्र[க்ஷுத்ர]னான என் திறத்தில் இரங்கினவன், தான் தேறவொண்ணாத திருவில்லாத் தேவரில் ஒருவனல்லன்; அகலகில்லேனிறையும் என்று அலர் மேல் மங்கை உறைமார்பன், என்னுமிடத்தையும், शेषभूत [சேஷபூத]னான தமக்கு ஸ்ரீமானே कैङ्कर्य-प्रति संबन्धि [கைங்கர்ய ப்ரதி ஸம்பந்தி] 1 என்னுமிடத்தையும், திறம்பாத 2 சிந்தைக்குச் சிக்கெனக் காட்டிக் கொடுக்கிறார்: (அரங்கத்தம்மான் திருவாரமார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டதே)- सर्व [ஸர்வ]ர்க்கும் अनुभवि[அநுபவி]க்கலாம்படி सर्व सहिष्णु[ஸர்வ ஸஹிஷ்ணு] 3 வாய்க்கொண்டு, கோயிலாழ்வாருக்குள்ளே கண் வளர்ந்தருளுகிற सौलभ्यकाष्ठै[ஸௌலப்யகாஷ்டை]யோடு विरोधि[விரோதி]யாத स्वामित्वकाष्ठै[ஸ்வாமித்வ காஷ்டை]யையுடையரான பெரியபெருமாளுடைய शेषित्व-पूर्ति[சேஷித்வ பூர்த்தி]க்கு 4 लक्षण[லக்ஷண]மான திருவையும், அழகு வெள்ளத்திற்கு அணை கோலினாற்போலே இருக்கிற हार[ஹார]த்தையும்...

-----------------------------

*1. கைங்கர்யம் பெறுபவன்; 2. மாறாத; 3. அனைத்தையும் பொறுப்பவன்; 4. சேஷித்வத்தின் முடிவாய்;*

-----------------------------------------------------------------

ஐந்தும் வென்றிலேன் பொறியிலேன் புனித• நின் இலங்கு பாதமன்றி மற்றோர் பற்றிலேன் எம்மீசனே (திருச்சந்த 90) ; *3. கைங்கர்யத்தை பெறுபவன்; न धर्मनिष्ठोऽस्मि न चात्मवेदी न भक्तिमान् त्वच्चरणारविन्दे* [ந தர்மநிஷ்டோஸ்மி ந சாத்மவேதீ ந பக்திமாந் த்வச்சரணாரவிந்தே] *(स्तो.र 22* – நான் கர்ம-ஜ்ஞாநயோகத்தையோ, உன் திரு வடியில் பக்தியோகத்தையோ செய்தவனல்ல ) – நினைக்க.

உடைத்தான திருமார்வன்றோ स्वाभाविक-शेषत्व-अनुभव-रसिक[ஸ்வாபாவிக சேஷத்வ அநுபவரஸிக] 1 னாய், அதற்குமேலே गुणैर्दास्यमुपागत [குணைர்தாஸ்யமுபாகத]னுமான 2 என்னை, स्वरूप -अनुरूप [ஸ்வரூப அநுரூப]மான स्तोत्रादि-शेषवृत्ति[ஸ்தோத்ராதி சேஷ வ்ருத்தி]யிலே 3 மூட்டி, அதற்கு இலக்காய் நின்றது.

இப்பாட்டில், पद[பத]ங்களில் அடைவே नारायण शब्द [நாராயண சப்த]த்தில் विवक्षित[விவக்ஷித]மான अनिष्ट-निवर्त-कत्व[ அநிஷ்ட நிவர்த்தகத்வ]மும், इष्ट-प्रापकत्व[இஷ்ட ப்ராபகத்வ]மும், உள்ளும்-புறமும் व्यापि[வ்யாபி]த்துநிற்கும்படியும், नित्यकृपै [நித்ய க்ருபை]யும், उपायत्व[உபாயத்வ]த்திற்கு प्रधान[ப்ரதாந]மான सौलभ्य[ஸௌலப்ய]மும், प्राप्यतै[ப்ரப்யதை]க்கு प्रधान[ப்ரதாந]மான स्वामित्व[ஸ்வாமித்வ]மும், सर्वानुगुण[ஸர்வாநுகுண]மான श्रिय:पतित्व [ச்ரிய:பதித்வ]மும், भूषणास्त्र- रूप[பூஷணாஸ்த்ர ரூப]ங்களான भुवन [புவந]ங்களைத் धरि[தரி]க்கிற भोग्यतम[போக்யதம]மான विग्रहयोग [விக்ரஹயோக]மும் 4, नार-शब्दार्थ[நார சப்தார்த்த]மான दासभूत[தாஸ பூத]ன் स्वरूप[ஸ்வரூப]மும், दास्य-फल[தாஸ்ய-பல]மாகப் 5 प्रार्थि [ப்ரார்த்தி]க்கப்படும் कैङ्कर्य[கைங்கர்ய]மும் <u>अनुसन्धेय[அநுஸந் தேய]ம்.</u>

-----------------------------

*1. இயல்பாகவே அடிமைத்தனத்தை ரஸிப்பவனாய்; 2. குணங்களால் கவரப்பட்டு அடிமையாகி நிற்பவன்; 3 துதிப்பது போன்ற சேஷனின் செயலில்; 4 திவ்ய-மங்கள உருவமுடைமை; 5. அடிமைக்குப் பயனாய்;*

-----------------------------

(अनुसन्धेयம்) - இப்பாட்டின் பதங்கள் நாராயண சப்தார்த்தத்தை குறிக்கின்றன என்பதைக்காட்டும் அட்டவணை :

| நாராயண சப்தத்தில் விவக்ஷிதங்கள் | பாசுரத்தின் பதங்கள் |
|---|---|
| अनिष्ट-निवर्तकत्वं[அநிஷ்டநிவர்த்தகத்வம்] | பழவினை பற்றறுத்து |
| इष्ट-प्रापकत्वं[இஷ்ட ப்ராபகத்வம்] | வாரமாக்கிவைத்தான் |
| वहिर्व्याप्ति[பஹிர்வ்யாப்தி] | வாரமாக்கிவைத்தான் |
| अन्तर्व्याप्ति[அந்தர்வ்யாப்தி] | என்னுள் புகுந்தான் |
| नित्य कृपै[நித்ய க்ருபை] | கோரமாதவம் |
| सौलभ्यं[ஸௌலப்யம்] | செய்தனன் |
| स्वामित्वं[ஸ்வாமித்வம்] | அரங்கத்தம்மான் |
| श्रिय:पतित्वं[ஶ்ரிய:பதித்வம்] | திரு |
| विग्रहयोगं[விக்ரஹயோகம்] | ஆர மார்பு |
| दासभूत-स्वरूपं[தாஸபூத ஸ்வரூபம்] | அடியேனை |
| दास्य-फल कैङ्कर्य प्रार्थना[தாஸ்ய பல கைங்கர்ய ப்ரார்த்தநா] | ஆட்கொண்டதே |

oooo 0 oooo

**து**ண்ட வெண்பிறையன்' इत्यादि[இத்யாதி]. கீழ்ப்பாட்டில் कैङ्कर्यार्थि[கைங்கர்யார்த்தி]யான 1 தம்முடைய कैङ्कर्य विरोधि[கைங்கர்ய விரோதி]களான निरुपाधिक-स्वामित्व-अभिमानमूल [நிருபாதிக ஸ்வாமித்வ அபிமாநமூல]ங்களை2 யெல்லாம் निराकरि [நிராகரி]த்த 3 படியை அருளிச்செய்தார். இப்பாட்டில், ऐश्वर्यार्थि[ஐச்வர்யார்த்தி]களானாருடைய 4 ऐश्वर्य-विरोधि[ஐச்வர்ய விரோதி]யான भिक्षु-दशै[பிக்ஷுதசை]யைக்கழிக்கும்படியை उदाहरि [உதாஹரி]க்கிறார்.

***துண்ட வெண்பிறையன் துயர் தீர்த்தவன்* அஞ்சிறைய***
***வண்டு வாழ் பொழில் சூழ் அரங்கநகர் மேயவப்பன்****
***அண்டரண்ட பகிரண்டத்து ஒரு மாநிலம் எழுமால் வரை* முற்றும்***
***உண்ட கண்டம்கண்டீர் அடியேனை உய்யக்கொண்டதே.***

**து**ண்ட வெண்பிறையன் துயர் தீர்த்தவன்) – ईश्वर [ஈச்வர]ன் என்னும் பேரைச் சுமந்த தனக்கு पूर्णत्वं [பூர்ணத்வம்] இல்லை என்கைக்கு ज्ञापक[ஜ்ஞாபகம்]போலே शकल -मात्र[சகல மாத்ர]மாய்க் 5 கொண்டு प्रकाशि [ப்ரகாசி]க்கிற चन्द्रकलै [சந்த்ரகலை]யைத் 6 धरि[தரி]க்கின்ற रुद्र[ருத்ர]ன், ब्रह्मा [ப்ரஹ்மா] வினுடைய पुत्र[புத்ர]னாய்வைத்து, पिता[பிதா]வின் திறத்திலே अपराध[அபராத]ம்பண்ணி, அத்தாலே महापातक-आक्रान्त [மஹாபாதக ஆக்ராந்த] 7 னாய், இப்पातक[பாதக]த்தைத் தீர்க்க வல்லாரார்? என்று कर-कलित-कपाल[கரகலித கபால] னாய்க் 8....

-----------------------------

1. குற்றேவல் செய்ய விழையும்; 2. இயல்பிலேயே ஆண்டான் என்ற செருக்கின் அடிப்படை; 3. போக்கிய; 4. இம்மை செல்வத்தை நாடும்; 5. சிறு பகுதியாய்; 6. சந்திரனின் பிறை; 7.பெரும் பிழையால் பீடிக்கப்பட்டு; 8. கையில் ஒட்டிக்கொண்ட மண்டை ஓட்டுடன்;

கொண்டு திரிந்து ஓரளவிலே ‘கெடு மரக்கலம் கரை சேர்ந்தாற்போலே’, कारुणिक[காருணிக]னான सर्वेश्वर[ஸர்வேச்வர]னை வந்து கிட்டி, ‘என் எந்தாய் शाप[சாப]ம் தீர்’ என்ன, இவனுடைய शाप[சாப]த்தைத் தீர்க்க வல்லவன். இத்தால், ईश्वर[ஈச்வர]ன் என்ற பேருடைய रुद्र[ருத்ர]ன் कर्मवश्य[கர்ம வச்ய]ன் என்னுமிடமும், தன்னைத் தான் रक्षि[ரக்ஷி]த்துக் கொள்ளமாட்டாத இவன் வேறெருத்தருக்கு निरपेक्ष-रक्षक [நிரபேக்ஷ ரக்ஷக]னாக 1 மாட்டான் என்னுமிடமும், ‘सर्वेश्वर [ஸர்வேச்வர]னே सर्व-अनिष्ट-निवर्तक[ஸர்வ அநிஷ்ட நிவர்த்தக]ன்’ என்னுமிடமும் சொல்லிற்றாயிற்று.

அஞ்சிறைய வண்டுவாழ் பொழில் சூழ் அரங்க நகர் மேயவப்பன்) _ आर्ति[ஆர்த்தி]யுடையார் अपेक्षि[அபேக்ஷி]த்தால், அவர்களுக்கு दूतकृत्य[தூத க்ருத்ய]ம் 2 பண்ணுகைக்கும், மாசின் மலரடிக்கீழ் அவர்களைச் சேர்க்கைக்கும் हेतु[ஹேது]வான गति[கதி]க்கு साधन[ஸாதந]ங்களாய், अधिरूप[அதிரூப]ங்களான 3 சிறகுகளை உடைத்தான வண்டுகள் अभिमत-भोग[அபிமத போக]த்தோடே 4 வாழ்கிற दिव्योद्यान[திவ்யோத்யாந]ங்களாலே 5 சூழப்பட்ட श्रीरङ्ग नगर[ஸ்ரீரங்க நகர]த்திலே नित्य-

----------------------------

1. எதையும் எதிர் பாராது, தானாகவே காப்பவன்; 2. தூதுவனாய் செயலபடுதல்; 3. அழகான; 4. விரும்பும் இன்பத்துடன்; 5. அப்ராக்ருதமான தோட்டங்களாலே;

----------------------------

(दूतकृत्यம்) - தருமன் விடத் தான் தூதுபோனார் வந்தார் (திருச்சின்ன 8)

(சேர்க்கைக்கும்) - எம்மீசர் விண்ணோர் பிரானார் மாசில் மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே (திருவிரு 54), நினைக்க.

वास[நித்யவாஸ]ம் பண்ணுகிற सर्वलोक पिता[ஸர்வ லோகபிதா] வானவன். இத்தால், कारणभूत[காரணபூத]னாய் करण-कळेवर [கரண களேபர]ங்களைக் 1 கொடுத்து उपकरि[உபகரி]த்தவன், கண்ணுக்கிலக்காய் வந்து கண்வளர்ந்து, करण[கரண]ங்கள் பட்டி புகுராதபடி 2 காக்கிற उपकार-अतिशय[உபகார அதிசய]த்தை उदाहरि[உதாஹரி]த்ததாகிறது. **नराज्जातानि तत्वानि** [நராஜ் ஜாதாநி தத்வாநி] 3 इत्यादि[இத்யாதி]களின் अर्थ[அர்த்த]மும் இங்கே अनुसन्धेयम्[அநுஸந்தேயம்].

का रणावस्थै[காரணாவஸ்தை]யில் 4 எல்லாக் कार्य[கார்ய]ங்களையும் தன் பக்கலிலே उपसंहरि[உபஸம்ஹரி]த்து 5, பின்பு सृष्टि[ஸ்ருஷ்டி]க்கும்படிக்கு उदाहरण[உதாஹரண]மாக, 'வெற்றிப்போர்க்கடலரையன் விழுங்காமல் தான் விழுங்கி உய்யக்கொண்ட' उपकार[உபகார]த்தைக் காட்டி, 'நெற்றி மேல் கண்ணானும் நான்முகனும்' முதலாக 'எம்பெருமான் உண்டுமிழ்ந்த எச்சில் தேவரல்லாதார் தாம் உளரே' என்னும் अर्थ[அர்த்த]த்தைப் பேசிக்கொண்டு, தம்மை இப்போதும் संसार-अर्णव [ஸம்ஸார அர்ணவ]ம் 6 விழுங்காதபடி உய்யக் கொண்டபடியை उपलालि[உபலாலி]க்கிறார் 7 : (அண்டரண்ட

-------------------------------

*1. உடல்-உறுப்புகளை; 2. பட்டியில் அடைபட்டுக் கிடக்காதபடி; 3. எல்லா தத்வங்களும் நரனாகிய எம்பெருமானிடமிருந்து உண்டானவை (பார.ஆநு 186.7 & மநு தா. 1.10.33); 4. ப்ரளய தசையில்; 5. அடக்கிக் கொண்டு; 6 ஸம்ஸார ஸாகரம்; 7. கொண்டாடுதல்;*

-------------------------------

(उपकार–अतिशयத்தை) - உடையவன் உடைமையை ரக்ஷிக்கையும், ஸமர்த்தன் அஸமர்த்தனை ரக்ஷிக்கையும் ப்ராப்தமிறே (ப்ர.ப்ரதி– ரஹஸ்.ஸா)

பகிரண்டத்து ஒரு மாநிலம் எழுமால் வரை முற்றும் உண்ட கண்டம் கண்டீர் அடியேனை உய்யக் கொண்டதே) – अण्डान्तर्वर्ति[அண்டாந்தரவர்த்தி]களான 1 देवादि-वर्ग[தேவாதி வர்க்க]ங்களையும், अण्ड[அண்ட]ங்கள் தன்னையும், अण्ड-आवरण[அண்ட ஆவரண]ங்களையும் 2, अण्ड[அண்ட]ங்களுக்குள்ளே पञ्चाशत्-कोटि-विस्तीर्ण[பஞ்சாசத் கோடி விஸ்தீர்ண]மான 3 महापृथिवि[மஹா ப்ருதிவி]யாலும்-कुलपर्वत[குலபர்வத]ங்களாலும் उपलक्षित[உபலக்ஷித]ங்களான 4 सर्वकार्य[ஸர்வ கார்ய]ங்களையும் எல்லாம் திரு வயிற்றிலே வைத்து रक्षि[ரக்ஷி]க்கைக்காக விழுங்கின திருக் கழுத்து கண்டீர் स्वरूप[ஸ்வரூப]த்தை உணர்ந்த என்னை स्वानुभव[ஸ்வாநுபவ]த்தாலே उज्जीवि[உஜ்ஜீவி]ப்பித்தது. अण्डादि[அண்டாதி]களைப் பற்றச் சிறியவான कुलपर्वतादि[குலபர்வதாதி]களைப் பிரியப் பேசுகையாலே, அவ்வளவு விழுங்குகையும் आश्चर्य[ஆச்சர்யம்] அன்று, என்று தோன்றுகிறது.

-----------------------------

*1. அண்டத்துக்குள் அடங்கிய; 2. அண்டத்தை மூடி நிற்பவை; 3. ஐம்பதுகோடி யோஜனை பரந்த; 4. குறிக்கப்பட்ட;*

oooo 0 oooo

மேல் நாலுபாட்டாலே, चतुर्थी[சதுர்த்தீ]யில் 1 प्रार्थनीय [ப்ரார்த்தநீய]மான 2 कैङ्कर्य[கைங்கர்ய]த்திற்குப் प्रस्तावक [ப்ரஸ்தாவக]மான 3 अनुभव[அநுபவ]ம் தம்மை இப்போது परवश [பரவச]மாக்கினபடியைப் பேசுகிறார். அதில், 'கையினார்' என்கிற பாட்டில், ஆழ்வார்களோடு பொருந்தின திருக் கையை अवलंबन[அவலம்பந]மாகக் கொண்டு திருமுடியளவும் சென்று மீண்ட சிந்தையை தூமுறுவல் தொண்டைவாய்ப் பிரானுடைய 'கோலந்திரள் பவளக் கொழுந்துண்டம் கொல்' 4 என்னும்படியான திருப்பவளத்தில் அழகு தன்वश [வச]மாக்கிற்று என்கிறார்.

***கையினார் சுரிசங்கனலாழியர்* நீள்வரைபோல்***
***மெய்யனார் துளபவிரையார் கமழ் நீள் முடி எம்***
***ஐயனார்* அணியரங்கனார் அரவினணைமிசைமேயமாயனார்****
***செய்யவாய் ஐயோ என்னைச் சிந்தை கவர்ந்ததுவே.(7)***

கையினார் சுரிசங்கனலாழியர்) –திருக்கைக்கு आयुध [ஆயுத]மாகைக்கும் आभरण[ஆபரண]மாகைக்கும் போரும் என்னும்படி ஆர்ந்த सन्निवेश[ஸந்நிவேச]த்தை 5 உடைத்தாய், வலம்புரியான வடிவாலே प्रणव-सन्निवेश[ப்ரணவ ஸந்நிவேச]மாய் 6, शब्द-ब्रह्ममय[சப்த ப்ரஹ்மமய]மாய் 7, निरतिशय-आनन्दहेतु[நிரதிசய ஆனந்தஹேது]வான 8 श्रीपाञ्चजन्य[ஸ்ரீபாஞ்சஜந்ய]த்

-----------------------------

*1. 'ஆய'; 2. இரந்த; 3. குறிப்பது ; 4. அழகெல்லாம் திரண்ட நன்றாய் வளர்ந்த பவளத்தின் துண்டமோ! (திருவாய் 7.7.3) ; 5. பொருந்திய பாகத்தை; 6. ப்ரணவம் போல்; 7. வேதஒலி வடிவாய்; 8. மிகுந்த இன்பத்தை அளிப்பதாய்;*

தையும், दानववन-दावाग्नि [தாநவ-வந-தாவாக்நி]யாய் 1 , मनस्तत्व-अभिमानि[மநஸ்தத்வ அபிமாநி]யான 2 திருவாழியாழ்வானையும் உடையராய்.

இத்தால், मन्त्र[மந்த்ர]த்தையும்-मनस्[மநஸ்]ஸையும் अनुकूल-चिन्तै[அநுகூல சிந்தை]க்கு 3 अनुगुण[அநுகுண]மாக்கவல்ல उपकरण[உபகரண]ங்களை உடையவர் என்றதாயிற்று. दिव्यायुध[திவ்யாயுத]ஆழ்வார்கள் பெரியபெருமாளுடைய திருக்கை रेखै[ரேகை]களில் ஒதுங்கிக் கிடந்து, பெருமாள் திருமேனியிலே தோன்றி நிற்பார்கள்.

நீள் வரைபோல் மெய்யனார்) – स्वरूपं [ஸ்வரூபம்] போலே सूक्ष्म-दृष्टि[ஸூக்ஷ்ம த்ருஷ்டி]கள் 4 காணுமளவன்றிக்கே, माम्स-चक्षुस्[மாம்ஸ-சக்ஷுஸ்]களும் காணலாம்படி மலை இலக்கான திருமேனியை உடையவர்.

----------------------------

*1. அரக்கராம் காட்டுக்குத் தீபோன்ற; 2. மனத்துக்கு ப்ரியமாய்; 3. நல்லெண்ணத்துக்கு; 4. ஸூக்ஷ்மமான அகக்கண்;*

----------------------------

(दानववन-दावाग्रियाय्) - रामाग्निं सहसा दीप्तं न प्रवेष्टुं त्वमर्हसि [ராமாக்நிம் ஸஹஸா தீப்தம் ந ப்ரவேஷ்டும் த்வமர்ஹஸி] (रामा 3.37.15 – கொழுந்து விட்டெரியும் ராமன் என்கிற நெருப்பை, நீ தாங்கமுடியாதவன் – ராவணனிடம் மாரீசன் வார்த்தை )

(मनस्तत्व- अभिमानि) - மனம் திகிரியாக (அதி. ஸ 41)

(दिव्यायुध ஆழ்வார்கள்) - *நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய கைத்தலங்கள் (பெரியா. தி 1.3.12)*

து ளபவிரையார் கமழ் நீள் முடி எம் ஐயனார்)– सर्वाधि-कत्व-सूचक[ஸர்வாதிகத்வ ஸூசக]மான 1 <u>திருத்துழாயின் परिमळ[பரிமள]த்தை</u>ப் परिपूर्ण[பூர்ண]மாக்கும்படி கமழ்ந்து, विभूति-द्वय साम्राज्य-व्यञ्जक[விபூதி த்வய ஸாம்-ராஜ்ய வ்யஞ்ஜக]மான 2 दिव्य-किरीट[திவ்ய-கிரீட]த்தையுடைய सर्वलोक पिता[ஸர்வலோக பிதா]வானவர்.

அ ணியரங்கனார்) – परमव्योम-क्षीरार्णवादि[பரம வ்யோம க்ஷீரார்ணவாதி]களைக் 3 காட்டில் गुणाति-शय[குணாதிசய]த் தாலே आश्रित[ஆச்ரித]ர்க்கு हृद्यतम[ஹ்ருத்ய தம]மான 4 படியாலே विभूति[விபூதி] இரண்டுக்கும் एका-भरणं[ஏகாபரணம்] 5 என்னலாய், सौलभ्य-अतिशय[ஸௌலப்ய அதிசய]ம் உண்டாம்படியான श्रीरङ्गविमान[ஸ்ரீரங்க விமாந]த்தை शयनस्थान [சயந ஸ்தாந]மாக 6 உடையவர். अणिमै[அணிமை]யாலே 7 'அணியரங்கனார்' என்கிறதாகவுமாம்.

அ ரவினணைமிசைமேய மாயனார்) – தம்முடைய ज्ञान-बल [ஜ்ஞாந-பல]ங்கள் வடிவு கொண்டார் போலே ....

-----------------------------

*1. அனைத்தையும் ஆளும்திறனைக் காட்டுவதான; 2. நித்ய-லீலா விபூதி இரண்டையும் குறிக்கும்; 3. பரமபதம்-திருப்பாற்கடல் முதலியவற்றைக் காட்டிலும்; 4. மனதுக்கு மிக இனிய; 5. ஒப்பற்ற ஆபரணம்; 6. கிடக்கும் நிலமாக; 7. சரீரத்தை சிறியதாக ஆக்கிக்கொள்ளல்;*

-----------------------------------------------------------------------

(திருத்துழாயின் परिमळத்தை) - . . வானோர் தலைமகனாம்• சீராயின தெய்வ நன்னோயிது• தெய்வத்தண்ணந்துழாய்த் தாராயினும் தழையாயினும் தண்கொம்பதாயினும் கீழ்வேராயினும்• நின்ற மண்ணாயினும் கொண்டு வீசுமினே (திருவிரு 53) – நினைக்க.

இருக்கிற திருவனந்தாழ்வானாகிற अनुकूल-दिव्य पर्यङ्क [அநுகூல திவ்ய பர்யங்க]த்தின் மேலே அளவறத் தேங்கின अमृत-तटाक[அம்ருத தடாக]ம் போலே 1 आश्रित [ஆச்ரித]ர்க்கு अनुभवि [அநுபவி]க்கலாம் **चिन्तामणिमिवोद्वान्तं उत्सङ्गे अनन्तभोगिनः** 2 என்னும்படி आश्चर्यभूत [ஆச்சர்ய பூத]ரானவருடைய.

செய்யவாய் ஐயோ என்னைச் சிந்தை கவர்ந்ததுவே) – 'வாலியதோர் கனிகொல்' 3 என்னலாம்படியான वर्ण-माधुर्यादि[வர்ண-மாதுர்யாதி]களையுடைத்தாய் வையமேழும் உள்ளே காணலாம்படியான செய்யவாய், என் சிந்தையைப் பறித்துக்கொண்டது. 'ஐயோ' என்றது, आश्चर्य [ஆச்சர்ய]த்தையாதல், अनुभवि[அநுபவி]த்து ஆற்ற அரிதான படியையாதல், अनुभव-रस[அநுபவ ரஸ]த்தையாதல் காட்டுகிறது.

------------------------------

*1. அமுத ஏரி; 2. श्रीस्तनाभरणं तेजः श्रीरङ्गेशयमाश्रये ।* ***चिन्तामणि-मिवोद्वान्तं उत्सङ्गे अनन्तभोगिनः*** [ஸ்ரீஸ்தநாபரணம் தேஜ: ஸ்ரீரங்கே சயமாச்ரயே | **சிந்தாமணிமிவோத்வாந்தம் உத்ஸங்கே அனந்தபோகி ந:**] *(ஸ்ரீரங்.ஸ் 1.8 – ஆதிசேஷனால் தன் மடியில் கக்கப்பட்ட சிந்தாமணி போல் ஒளிரும்); 3. நன்கு கனிந்த ஒப்பற்ற பழமோ;*

------------------------------

(வையமேழும்) - வையமேழும் கண்டாள் பிள்ளை வாயுளே (பெரிய தி 1.2.6)

oooo 0 oooo

தம்மை जितं ते पुण्डरीकाक्ष 1 इत्यादि[இத்யாதி]களிற்படியே தோற்பித்துத் திருவடிகளிலே விழப்பண்ணி, மேலே மேலே अनुभव[அநுபவ]த்தை உண்டாக்கின தாமரைக் கண்களுக்குத் தாம் அற்றுத் தீர்ந்தபடியை आश्रित-विरोधि-निराकरण-वृत्तान्त-पूर्वक[ஆச்ரித விரோதி நிராகரண வ்ருத்தாந்த பூர்வக]மாக 2 अनुभवि[அநுபவி]க்கிறார்.

***பரியனாகி வந்த அவுணனுடல் கீண்ட* அமரர்க்கு***
***அரிய ஆதிப்பிரான் அரங்கத்தமலன் முகத்து****
***கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி* நீண்ட அப்***
***பெரியவாய கண்கள் என்னைப் பேதமை செய்தனவே(8)***

பரியனாகி வந்த அவுணனுடல் கீண்ட) – सर्व लोक [ஸர்வலோக]த்திலுமுள்ள तमस्[தமஸ்]ஸெல்லாம் திரண்டு ஒரு வடிவு கொண்டாற்போலே अतिस्थूल [அதிஸ்தூல]னாய் 3, महामेरु[மஹாமேரு] நடந்தாற் போலே எதிர்த்துவந்த திரண்டதோள் இரணியன் சினம் கொள் ஆகம் ஒன்றையும் ஒரு வாழை மடலைக் கிழிக்குமாப்போலே இரண்டு கூறு செய்தவனாய்;

அமரர்க்கு அரிய ஆதிப்பிரான்) – தன்னாலே सृष्ट [ஸ்ருஷ்ட]ருமாய்4 उपकृत[உபக்ருத]ருமான 5 देव[தேவ]ர்கள், தான் कारणभूत[காரணபூத]னாய் उपकारक [உபகாரக]னாய் நிற்கிற

-----------------------------

1. *जितं ते पुण्डरीकाक्ष नमस्ते विश्वभावन । नमस्तेऽस्तु हृषीकेश महापुरुष पूर्वज* **[ஜிதம் தே புண்டரீகாக்ஷ நமஸ்தே விச்வபாவந | நமஸ்தேஸ்து ஹ்ருஷீகேச மஹாபுருஷ பூர்வஜ]** *(जितंते 1.1 –தாமரைக் கண்ணா! உன்னால் இந்த ஆத்மா ஜெயிக்கப்பட்டது); 2. அண்டினவர்களின் எதிரியைக் களையும் கதையுடன்; 3.மிகப்பெரிதாய்; 4. படைக்கப்பட்ட;. 5. உதவி பெற்றவர்;*

நிலையறியமாட்டாமையாலே அவர்களுக்கு, प्रह्लाद [ப்ரஹ்லாத]ன் அணுகி अनुभवि[அநுபவி]த்தாற்போலே அணுகவும் अनुभवि[அநுபவி]க்கவும், அரியனாய் இருக்கிற;

அரங்கத்தமலன் முகத்து) – हेय-आकर[ஹேய ஆகர]மான 1 संसार[ஸம்ஸார]த்துக்குள்ளே கோயிலாழ்வாருடனே எழுந்தருளி வந்து 'அணியார் பொழில் சூழ் அரங்க நகர் அப்பா துணியேன் இனி நின்னருள் அல்லது எனக்கு' என்று இருப்பார், தம்முடைய திருவடிகளையடைந்து அருள் சூடி உய்யும்படி அவர்களுடைய ஐயப்பாடு முதலான हेय[ஹேய]ங்களை அறுத்துத் தோன்றும் அழகையுடையரான பெரியபெருமாளுடைய 'கோளிழைத் தாமரை' 2 इत्यादि[இத்யாதி]களாலே பேசப்பட்ட பேரழகையுடைத்தாய், சந்திரனும் தாமரையும் ஒன்றினாற்போலே இருக்கிற திருமுகத்தில்;

கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி* நீண்ட அப்பெரியவாய கண்கள்) – நிகரில்லாத நீல ரத்நம்போலே இருக்கிற तारकै[தாரகை]யின் நிறத்தாலே .....

-----------------------------

*1. பாப அம்சங்கள் நிறைந்த; 2. **கோளிழைத் தாமரையும்** கொடியும் பவளமும் வில்லும்• கோளிழைத் தண்முத்தமும் தளிரும் குளிர் வான்பிறையும்• கோளிழையாவுடைய கொழுஞ்சோதி வட்டங்கொல் ?• கண்ணன் கோளிழை வாண் முகமாய் கொடியேனுயிர் கொள்கின்றதே (திருவாய் 7.7.8 – தங்கள் அழகையே ஆபரணமாக உடைய இரு தாமரைப் பூக்கள், ஒரு கற்பகக் கொடி, ஒரு பவளத்துண்டம், இரு விற்கள், குளிர்ந்த முத்துக்களின் வரிசை, இரு தளிர்கள், அஷ்டமீ-சந்த்ரன், இவைகளெல்லாம் சேர்ந்த ஒரு ஜ்யோதிர் மண்டலமோ இது ! கண்ணனின் அழகுமுகம் எனப் பெயர் கொண்டு, கொடிய பாபியான என் ப்ராணனை அபஹரிக்கிறதே! );*

नीलोत्पल-वर्ण[நீலோத்பல வர்ண]ங்களாய் 1, आश्रित-दर्शन-प्रीति [ஆச்ரித தர்சந ப்ரீதி]யாலே 2 அன்றலர்ந்த தாமரைப் பூப் போலே अतिविकसित[அதிவிகஸித] 3 ங்களாய், आसन्न[ஆஸந்ந] 4 ரானாரெல்லார் பக்கலிலும் आदर[ஆதரம்] தோன்றும்படி யான उल्लास[உல்லாஸ]த்தையுடையவையாய் अनन्य[அநன்ய]ர் 5 பக்கல் अनुराग[அநுராக]த்திற்குக் கீற்றெடுக்கலாம்படியான சிவந்த வரிகளாலே व्याप्त[வ்யாப்த]ங்களாய் 6, स्वभाव-सिद्ध [ஸ்வபாவ ஸித்த]ங்களான आयाम-विस्तार[ஆயாம-விஸ்தார]ங்களை 7 உடையவையான திருக்கண்கள். 'அப் பெரிய' என்ற தற்கு, இப்போது காண்கிறவளவன்றிக்கே, शास्त्रवेद्य [சாஸ்த்ர வேத்ய]மாய் 8 अनवच्छिन्न [அநவச்சிந்ந]மான 9 भोग्यता-प्रकर्ष[போக்யதா ப்ரகர்ஷ]த்தையும், माहात्म्य[மாஹாத்ம்ய]த்தையு முடைய என்று तात्पर्य [தாத்பர்ய]மாகவுமாம்.

என்னைப் பேதமை செய்தனவே) – இவ்வनुभवरस [அநுபவ ரஸ]த்திலே அமிழ்ந்த என்னை, அல்லாத தொரு ज्ञानानुष्ठान [ஜ்ஞாநாநுஷ்டாந]ங்களுக்கு अनर्ह[அநர்ஹ]னாம் படி பண்ணிற்றன.

-----------------------------

1. கருநெய்தற் பூ போன்ற நிறத்தனனாய்; 2. அண்டியவரைக் கண்ட மகிழ்ச்சியாலே; 3. நன்கு அலர்ந்த; 4. நெருங்கினவர்; 5. வேறு பயனையோ / தெய்வத்தையோ நாடாதவர்; 6. சூழ்ந்த; 7. நீண்டும்-பரந்தும்; 8 சாஸ்த்ரங் களினாலேயே அறியத் தக்கதாய்; 9 அளவிட முடியாத;

oooo 0 oooo

अवयव शोभै[அவயவ சோபை]களிலே ஆழங்காற்பட்ட தம்முடைய நெஞ்சு வருந்தி, எங்கும் व्यापि [வ்யாபி]த்து सर्वावयव शोभै[ஸர்வாவயவ சோபை] 1 களோடும் கூடின समुदाय शोभै[ஸமுதாய சோபை] 2 யாலே पूर्ण[பூர்ண]மாய், नित्यानुभव-श्रद्धै[நித்யாநுபவ ச்ரத்தை]யாலே 3 முன் பெற்றதாய் நினைத்திருந்த पूर्ति[பூர்த்தி]யை இழந்தது என்கிறார்:

***ஆலமா மரத்தினிலைமேல் ஒரு பாலகனாய்****
***ஞாலமேழுமுண்டான் அரங்கத்தரவின் அணையான்****
***கோல மாமணியாரமும் முத்துத்தாமமும் முடிவில்லதோர் எழில்****
***நீலமேனி ஐயோ நிறைகொண்டது என்நெஞ்சினையே.*** *(9)*

ஆலமா மரத்தினிலைமேல் ஒரு பாலகனாய்) – ஓர் अवान्तरप्रळय[அவாந்தர ப்ரளய]த்திலே, ‘ஆலன்று வேலை நீர் உள்ளதோ விண்ணதோ மண்ணதோ’ என்று அறிய வரிதாய், अनन्त-शाख[அனந்த சாக]மாய் 4 இருப்பதொரு वटवृक्ष [வட வ்ருக்ஷ]த்தில் ஓரிலையிலே, தாயும்-தந்தையுமில்லாததொரு தனிக் குழவியாய்;

ஞாலமேழுமுண்டான்) – அடுக்குக் குலையாமல் <u>மார்க்கண்டேயன் காணும்படி</u> सर्वलोक[ஸர்வலோக]

-----------------------------

*1. முழுத் திருமேனி அழகு; 2. மொத்த அழகு; 3. எப்போதும் அநுபவிக்க ஆர்வத்தாலே; 4. பல கிளைகளையுடைய;*

----------------------------------------------------------------

(மார்க்கண்டேயன் காணும்படி) – य: स देवो मया दृष्ट: पुरा पद्मायतेक्षण: । स एष पुरुषव्याघ्र: संबन्धी ते जनार्दन: ॥ सर्वेषामेव लोकानां पिता माता च माधव: । गच्छध्वमेनं शरणं शरण्यं पुरुषर्षभा: [ய: ஸ தேவோ மயா த்ருஷ்ட: புரா பத்மயதேக்ஷண: | ஸ ஏஷ புருஷ வ்யாக்ர: ஸம்பந்தீ தே ஜநார்தந: | ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதா ச மாதவ: | கச்சத்வமேநம் சரணம் ...

ங்களையும் திருவயிற்றிலே வைத்தவன்.

அ ரங்கத்தரவின் அணையான்) – प्रळय काल [ப்ரளய கால]த்திலே बाल[பால]னாய்க்கொண்டு ஆலிலை மேலே கண் வளர்ந்தருளுகிற போதோடு, सर्वकाल [ஸர்வகால]த்திலும் கோயிலாழ்வாருக்குள்ளே सूरि[ஸூரி]களுக்கெல்லாம் தலைவரான திருவனந்தாழ்வான் மேலே 'உலகுக்கோர் தனியப்பன் என்னும்படி தன் प्रजै[ப்ரஜை]களான ब्रह्मादि[ப்ரஹ்மாதி]கள் आराधि[ஆராதி]க்கக் கண்வளர்ந்தருளுகிற போதோடு வாசியற कारणत्व- रक्षकत्वादि[காரணத்வ-ரக்ஷகத்வாதி]கள் காணலாம்படியிருக்கிற பெரிய பெருமாளுடைய;

கோ ல மாமணியாரமும்) – நாச்சியாருக்குக் கோயில்-கட்டணமாயிருக்கிற திருமார்வுக்கொரு रत्नप्राकार [ரத்ந ப்ராகார]ம்போலே अभिरूप[அபிரூப]மாய் अतिमहत्[அதிமஹத்]

---

சரண்யம் புருஷர்ஷபா:] (भा.वन 161.50,56 – தாமரைக்கண்ணனான எந்த தேவன் என்னால் ப்ரளய காலத்தில் பார்க்கப்பட்டானோ, ஜநார்த்தநனாகிய அவனே உனக்கு ஸம்பந்தியாய் நிற்கிறான் – பாண்டவர்களிடம் மார்க்கண்டேயர் சொன்னது)

(ஆலிலை மேலே) – 'பாலகனாய் ஆலிலைமேல் பைய• உலகெல்லாம் மேலொருநாள் உண்டவனே [மு.தி 33]

(வாசியற कारणत्व-रक्षकत्वादिகள்) - 'அங்கு வைத்து இங்குப் பிறந்த' [பரமபதத்தில் உள்ள ஸ்வரூப-ஸ்வபாவங்களுடனே, பூவுலகிலும் பிறந்த] எனும் ஆழ்வார் ஸ்ரீஸூக்தியை நினைப்பது.

-प्रळय कालத்திலே இருந்தவன் என்றதால், காரணன் என்பதும்; உண்டவன் என்பதால், ரக்ஷகன் என்பதும் சொல்லப்பட்டது. அரங்கன் விஷயத்தில், 'உலகுக்கோர் தனியப்பன்' என்பதால் காரணன் என்பதும்; 'ப்ரஹ்மாதிகள் ஆராதிக்க' என்பதால், ரக்ஷகன் என்றும் தேர்கிறது.

தாய் महार्घ-रत्न[மஹார்க்க ரத்ந]மான 1 திருவாரமும்;

(மு த்துத்தாமமும்) – சன்னவீரமாயும் 2, एकवल्लि [ஏகவல்லி] யாயும் 3, त्रिसर[த்ரிஸர]மாயும், पञ्चसर[பஞ்ச ஸர]மாயு முள்ள திருமுத்து வடங்களும்;

(மு டிவில்லதோர் எழில் நீலமேனி) – இவை தனக்கும் अतिशयकर[அதிசயகர]மாய், अनन्त[அனந்த]மாய், अद्वितीय [அத்விதீய]மான अभिरूप[அபிரூப]த்தை உடைத்தாய் कालमेघं [காளமேகம்]போலே श्रमहर[ச்ரமஹர]மான 4 திருமேனியும்; आभरण[ஆபரண]ங்களுக்கு முடிவில்லதோர் எழிலை உண்டா க்கும்படியான நீலமேனி என்னவுமாம்.

(ஐ யோ நிறைகொண்டது என்நெஞ்சினையே) – தனித் தனியே दिव्य अवयव[திவ்ய அவயவ]ங்களை अनुभवि [அநுபவி]த்த என் நெஞ்சை, समुदाय अनुभव[ஸமுதாய அநுபவ] த்தாலே முன்புற்ற पूर्णत्वाभिमान-गर्भ[பூர்ணத்வாபிமான கர்ப்ப] மான 5 गांभीर्य[காம்பீர்ய]த்தைக் கழித்து, இப் पूर्ण अनुभव[பூர்ண..

---

*1.விலையுயர்ந்த ரத்நம்; 2. வெற்றிச் சின்னம்; 3. ஒற்றை வடம்; 4. களையாற்றும்; 5. முழுமைபெற்ற செருக்கைக் காட்டும்;*

---

(இவை தனக்கும் अतिशयकरமாய்) – திருமுத்து வடங்களுக்கு மேன்மையூட்டும் படியான நீலமேனி என்கிறார். இங்கு, गुणा: सत्य ज्ञानप्रभृतय उत त्वद्गततया शुभीभूयं याता इति हि निरणैष्म श्रुतिवशात् [குணா: ஸத்ய ஜ்ஞாந ப்ரப்ருதய உத த்வத்கததயா சுபீபூயம் யாதா இதி ஹி நிரணைஷ்ம ச்ருதிவசாத்] (वर.स्त 11- ஸத்யம்/ ஜ்ஞாநம் முதலிய குணங்கள் உம்மை யடைந்து இருப்பதால் மங்களத்தன்மை அடைந்தன என்பதை வேதங்களைக் கொண்டு நிர்ணயித்தோம்) என ஆழ்வான் ஸாதித்ததை நினைப்பது.

அநுபவ]த்திற்கு विच्छेद[விச்சேத]ம் 1 வரில் செய்வதென் என்கிற अतिशङ्कै[அதிசங்கை]யாலே2, 'பிரிவின்றி ஆயிரம்பல்லாண்டு' என்று नित्य सापेक्ष[நித்ய ஸாபேக்ஷ]மாம்படி 3 பண்ணிற்று.

-----------------------------

*1. இடைவெளி; 2. கவலை; 3. எப்போதும் அதைபற்றியே நினைத்திருக்கும்படி;*

oooo 0 oooo

இவ்வாழ்வார், ‘அடியேன்’ என்னுமதொழிய இப் प्रबन्ध [ப்ரபந்த]ம் தலைக்கட்டுகிற வளவிலும் தம்முடைய ஊரும் பேரும் பேச மறக்கும்படி தாம் பெற்ற अनुभव[அநுபவ] த்திற்குப் பெரிய பெருமாள் இனி ஒரு विच्छेदं[விச்சேதம்] வாராதபடி பண்ணினபடியைக்கண்டு, தம்முடைய आत्मा-वधि[ஆத்மாவதி]யான 1 अनन्या-नुभव-रस[அனந்யாநுபவ ரஸ]த்தை 2 मुक्त[முக்த]னுடைய सामगान[ஸாமகான]த்தின்படியிலே பாடி अनादि-काल[அநாதி கால]ம் बाह्यानुभव[பாஹ்யாநுபவ]ம் 3 பண்ணின क्लेश[க்லேச]ம் 4 தீர்ந்து कृतार्थ[க்ருதார்த்த]ராகிறார்:

***கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்***
***உண்ட வாயன்* என்னுள்ளம் கவர்ந்தானை****
***அண்டர்கோன் அணியரங்கன் என் அமுதினைக்***
***கண்டி கண்கள்* மற்றொன்றினைக் காணாவே.(10)***

கொண்டல் வண்ணனை) – கடலிலுள்ள நீரெல்லாம் வாங்கி, कावेरी-मध्य[காவேரீ மத்ய]த்திலே பணிந்த தொரு कालमेघं[காளமேகம்]போலே, கண்டார்க்கு श्रमहर[ச்ரம ஹர]மான திருமேனியை உடையவனை; அங்கனன்றிக்கே, जङ्गम-स्थावर[ஜங்கம-ஸ்தாவர]ங்களெல்லாம் उज्जीवि[உஜ்ஜீவி]க் கும்படி जल-स्थल-विभाग[ஜல-ஸ்தல-விபாக]மற5 कारुण्यरस[காருண்ய ரஸ]த்தை वर्षि[வர்ஷி]ப்பதொரு कालमेघ[காளமேக]த்தின் स्वभाव [ஸ்வபாவ]த்தை உடையவனை, என்னவுமாம்.

-----------------------------

*1. ஆத்மா உள்ளவரை; 2. வேறெதிலும் செல்லாத அநுபவ ரஸம்; 3. இம்மைச் சுகத்தை ரஸித்த; 4. துன்பம்; 5. நீர்-நிலம் என்ற பாகுபாடின்றி;*

கோவலனாய் வெண்ணெய் உண்ட வாயன்) – எட்டும் இரண்டும் 1 அறியாத இடையரையும்-இடைச்சிகளையும் रक्षि[ரக்ஷி]க்கையாலே, தன்னுடைய सर्व लोक-रक्षकत्व[ஸர்வலோக ரக்ஷகத்வ]ம் வெளிப்படும்படி இடையரில் ஒரு रूप[ரூப]த்தைக்கொண்டு आश्रित[ஆச்ரித]ர் உகந்த द्रव्य[த்ரவ்ய]மெல்லாம் தனக்கு உகப்பு என்னும்படிதோற்ற, அவர்கள் 'ஈட்டியவெண்ணெய்', 'சூட்டு நன்மாலை'யிற்படியே अप्राकृत-भोग[அப்ராக்ருத போக]ம் போலே अनुभवि[அநுபவி]த்து, அத்தாலே இப்போதும் குணுங்கு 2 நாறும்படியான திருமுகத்தை உடையவன்.

-----------------------------

*1. திருமந்த்ரமும், த்வய-சரமச்லோகங்களுமான ரஹஸ்யங்களை; 2.வெண்ணெயின் பிசுக்கு மணம்;*

---------------------------------------------------------------

(அறியாத இடையரையும்-இடைச்சிகளையும்) - 'அறிவொன்றும் இல்லாத ஆய்ச்சியர் [திருப்பாவை 28]' என நாச்சியாரும்; 'அறியாத இடைச்சியரும் அறியும் வண்ணம் ......[அம்.ஸ்வா 12 ]' என ஸ்வாமி தேசிகனும் அநுபவித்ததை நினைப்பது.

(ஈட்டியவெண்ணெய்) - 'சீரார் கலை அல்குல் சீரடிசெந்துவர் வாய்• வாரார் வனமுலையாள் மத்தாரப் பற்றிக்கொண்டு• ஏரார் இடைநோவ எத்தனையோர் போதுமாய்• சீரார் தயிர்கடைந்து வெண்ணெய் திரண்டதனை' (சி.மட 13)

(சூட்டு நன்மாலை) - சூட்டு நன்மாலைகள் தூயனவேந்தி• விண்ணோர்கள் நன்னீராட்டி அந்தூபம் தரா நிற்கவே அங்கு• ஓர் மாயையினால் ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப் போந்து இமி யேற்றுவன்கூன் கோட்டிடை ஆடினை கூற்று• அடலாயர்தம் கொம்பி னுக்கே (திருவிரு 21 – பரமபத்திலுள்ள நித்யர்களும்-முக்தர்களும், எம்பெருமானை திவ்ய தீர்த்தத்தினால் நீராட்டி, அணிவதற்கு ஏற்ற பரிசுத்தமான மாலைகளை சாற்றி, வாஸனையான தூபத்தை ஸமர்ப்பித்து நிற்க, தன் ஸ்வதந்த்ர ஸங்கல்பத்தினால் ஆய்ப்பாடியில் இடைச்சியர் கடைந்து வைத்த நவநீதத்தைத் திருடி உண்டும்; வஞ்சிக் கொடிபோன்ற நப்பினைப் பிராட்டியைக் கைபிடிக்கவேண்டி, வலியதும்-முரடுமான ஏழு எருதுகளை அடக்கி, அதன் கொம்புகளின் நடுவே நடனம் செய்தும் அருளிய பிரானே)

என்னுள்ளம் கவர்ந்தானை) – இடைச்சிகள் வைத்த வெண்ணெய்போலே இவருடைய திருவுள்ளம், பெரியபெருமாளுக்கு 'நவநீத'மாயிற்று. ஞானம் பிறந்த பின்பும், 'என்னது' என்னும்படி अहङ्कार-ममकार[அஹங்கார-மமகார]ங்கள் வடும்பிடுகிற 1 என்னுடைய मनस्[மநஸ்]ஸை, வடிவழகாலும்,सौलभ्य-सौशील्य-वात्सल्यादि[ஸௌலப்ய-ஸௌசீல்ய-வாத்ஸல்யாதி]களாலும் वशीकरि[வசீகரி]த்து, இனி 'என்னது' என்னவொண்ணாதபடி கைக்கொண்டவனை.

அண்டர்கோன்)– இடையர்க்கு नियाम्य[நியாம்ய]னாய் 2 நின்ற எளிமை गुण[குண]மாம்படி, अण्डाधिपति[அண்டாதிபதி]யான ब्रह्मा[ப்ரஹ்மா]முதலாக மற்றும் अण्डान्तर्वर्ति [அண்டாந்தர்வர்த்தி]களான देवादि[தேவாதி]களை எல்லாம் स्वाधीन[ஸ்வாதீந]ர் 3 ஆக்கி வைத்திருக்கிற स्वामित्व- स्वातन्त्र्यादि[ஸ்வாமித்வ-ஸ்வாதந்த்ர்யாதி]களை உடையவன். 'கண்ணிக் குருங்கயிற்றால் கட்டுண்டான் ஆகிலும், எண்ணற்கரியன் இமையோர்க்கும்' என்கிறாராகவுமாம்.

-----------------------------

*1. தழும்பேறிய; 2. கட்டுப்பட்டவனாய்; 3. தன் வசப்படுத்தி;*

---

(இவருடைய திருவுள்ளம்) –सज्जनस्य हृदयं नवनीतं [ஸஜ்ஜநஸ்ய ஹ்ருதயம் நவநீதம்] என்னும்படி ஆழ்வாருடைய திருவுள்ளம் வெண்ணெய் ஆயிற்றே.

(கண்ணிக் குருங் கயிற்றால்) - "வண்ணக் கருங்குழல் ஆச்சியால் மொத்துண்டு• கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டான் காணேடீ! கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டான் ஆகிலும்• எண்ணற்கரியன் இமையோர்க்கும் சாழலே!" (பெரிய தி 11.5.5 – ஒருத்தி, எம்பெருமானின் ஸௌலப்யத்தையும், மற்றொருத்தி அவனுடைய மேன்மையையும் அநுபவிக்கும் பாசுரம் இது – அழகிய கருங்கூந்தலுடைய யசோதையின் கையாலே அடியுண்டு, பல .....

அ ணியரங்கன்) – सूरि[ஸூரி]களும் स्वदेश[ஸ்வதேச]த்தை விட்டு இங்கு வந்து सेवि[ஸேவி]க்கும்படி आकर्षक [ஆகர்ஷக]மான 1 அழகையுடைத்தான स्थान-विशेष [ஸ்தாந விசேஷ]த்திலே, அடியேனை अनुभव-परवश [அநுபவ பரவச] மாக்கினவனை.

எ ன் அமுதினை) – परमपद[பரமபத]த்திலும் क्षीरार्णव [க்ஷீரார்ணவ]த்திலும் आदित्य मण्डलादि[ஆதித்ய மண்டலாதி] களிலும் அவ்வோ நிலங்களுக்கு நிலவரானார் अनुभवि [அநுபவி]க்கும்படியான अमृत[அம்ருத]மாய் நின்றாற் போலன் றிக்கே, 'நீசனேன் நிறைவொன்றுமிலேன்' என்கிற நானும் अनुभवि[அநுபவி]க்கும்படி எனக்கு असाधारण [அஸாதாரண]மாய் जरा-मरणादि-प्रवाह[ஜரா-மரணாதி ப்ரவாஹ]த்தை 2 निश्शेष[நிச்சேஷ] மாகக் கழிக்கவல்ல निरतिशय-भोग्य[நிரதிசய போக்ய]மான வனை; प्राकृत-भोग-प्रवण[ப்ராக்ருத போக ப்ரவண]ரான 3 देव[தேவ]ர் கள் अनेक प्रयास[அநேக ப்ரயாஸ]த்தோடே 4 பெற்று अनुभवि [அநுபவி]க்கும் अमृतं[அம்ருதம்] போலன்றிக்கே, अनन्य-प्रयोजन [அனந்ய ப்ரயோஜந]னான நான், अयत्न[அயத்ந]மாகப் 5 பெற்று अनुभवि[அநுபவி]க்கும்படியான अमृतं[அம்ருதம்] ஆனவனை, என்னவுமாம்.

------------------------------

*1. கவரும்; 2. மூப்பு-மரணம் ஆகிய பெருக்கு; 3. இம்மை பயனில் ஆழ்ந்த; 4. முயற்சி; 5. முயற்சியின்றி;*

---

முடிச்சுக்களையுடைய சிறு கயிற்றால் கட்டுண்டு கிடந்தானே ! என்ன; மற்றொருவள், அப்படியேயாகிலும் அவன் தேவர்களுக்கும் நினைத்துப் பார்க்க முடியாதவன்றோ ! என்கிறாள்)

கண்ட கண்கள்) என்கிற இதிலே, 'என் கண்கள்' என்னாமையாலே निर्ममत्व[நிர்மமத்வ]ம் 1 தோற்றுகிறது; இப்படி, बाधित-अनुवृत्ति[பாதித அநுவ்ருத்தி] 2 இல்லாத படியான तत्व ज्ञानं[தத்வஜ்ஞாநம்]பிறந்து सर्व[ஸர்வ]த்திலும் निर्मम[நிர்மம]ரா யிருக்கிற இவர், முன்பு 'என் கண்' என்றும், 'என் சிந்தை' என்றும் 'அடியேன் உள்ளம்' என்றும், 'என் உள்ளம்' என்றும் ममकार[மமகார]ம் பின்தொடர்ந்து தோன்றப் பேசு வானென் என்னில், स्वतन्त्र-स्वामि[ஸ்வதந்த்ர ஸ்வாமி]யான ईश्वर [ஈச்வர]ன் स्वशेष भूत[ஸ்வசேஷபூத]மான 3 चेतनाचेतन[சேதநாசேதந] ங்களிலே स्वार्थ[ஸ்வார்த்த]மாக ஒன்றையொன்றுக்கு शेष [சேஷ]மாக அடைத்துவைத்தால், அவனடைத்தபடி அறிந்து பேசுவார்க்கு, निर्मम[நிர்மம]த்தோடே சேர்ந்த இம் ममकार [மமகார]ம், अनभिज्ञ[அநபிஜ்ஞ]ர் 4 ममकार[மமகார]ம்போலே दोष [தோஷ]மாகாது.

மற்றொன்றினைக் காணாவே) – இதற்கு முன்பெல் லாம் बाह्य-विषय[பாஹ்ய விஷய]ங்களிலே प्रवण [ப்ரவண] 5 ங்களாய், அவற்றைக் கண்டபோது प्रीति[ப்ரீதி]யும்- காணாத போது विषाद[விஷாத]முமாய்ச் 6 சென்று, இப்போது नित्य-

-----------------------------

*1. எனது என்ற எண்ணம்; 2. தொலைத்த 'எனது' என்பது தொடராமல்; 3. தனக்கு சேஷமான; 4. அறிவிலி; 5. இம்மை பயனில் ஆழ்ந்தவராய்; 6. துன்பம்;*

-----------------------------

(முன்பெல்லாம்) - `राजभोग–विरुद्ध[ராஜபோக-விருத்த]ங்களான जुगुप्सित विषय[ஜுகுப்ஸித விஷய]ங்களிலே, தனக்குப் பேறும் -இழவும், हर्ष–शोक[ஹர்ஷ-சோக]ங்களுமாய்' (உபோ– ரஹ.ஸா) என்பதை அநுஸந்திக்கவும்.

दरिद्र[நித்ய தரித்ர]னானவன், निधि[நிதி]யைக் கண்டாற்போலே अनन्त-गुण-विभूति-विशिष्ट[விசிஷ்ட]மாக 1 இம்महानिधि[மஹாநிதி]யை अनुभवि[அநுபவி]க்கப்பெற்ற கண்கள், <u>மற்றொன்றினைக் காணாவே</u>. प्राप्त-विषय[ப்ராப்த விஷய]த்திலே 2 प्रतिष्ठित[ப்ரதிஷ்டித]மான सङ्ग[ஸங்க]த்தை 3 உடைத்தானபடியாலே, परिचर्यार्थ[பரிசர்யார்த்த]மாக 4 வந்து पार्श्ववर्ति[பார்ச்வவர்த்தி]களாய் 5 நிற்கும் पद्मयोनि[பத்மயோநி] 6 முதலானோரையும் பாராது.

पुरुषाणां सहस्रेषु तेषु वै शुद्धयोनिषु । अस्मान्न कश्चिन्मनसा चक्षुषा वाऽप्यपूजयत् [புருஷாணாம் ஸஹஸ்ரேஷு தேஷு வை சுத்த யோநிஷு | அஸ்மாந்ந கச்சிந்மநஸா சக்ஷுக்ஷா வாப்யபூஜயத்] 7 என்கிறபடியே ब्रह्म पुत्र[ப்ரஹ்ம புத்ர]ர்களாய், **यूयं जिज्ञासवो भक्ता:** 8 ......

------------------------------

*1. கணக்கற்ற குணம்-செல்வம்உடைத்ததாக; 2. கிட்டின பொருளில்; 3. சேர்க்கை; 4. குற்றேவல் புரிய; 5. அருகில் நிற்கும்; 6. பிரமன்; 7. சுத்த யோநிகளான பல்லாயிரக்கணக்கான ச்வேதத்வீப-வாஸிகளில் ஒருவரும் எங்களை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. 8. सुतप्तं वस्तपो विप्रा: प्रसन्नेनान्त-रात्मना।* ***यूयं जिज्ञासवो भक्ता:*** *कथं द्रक्ष्यत तं विभुम्* [ஸுதப்தம் வஸ்தபோவிப்ரா: ப்ரஸந்நேநாந்தராத்மநா | **யூயம் ஜிஜ்ஞாஸவோ பக்தா:** கதம் த்ர்யக்ஷத தம் விபும்] *(भा.शा. 347.18,19 – நீங்கள் பகவானைக் காணும் நிலையிலிருக்கும் பக்தர்கள்);*

------------------------------------------------------------------

(மற்றொன்றினைக் காணாவே) – तवामृतस्यन्दिनि पादपङ्कजे निवेशितात्मा कथमन्यदिच्छति । स्थितेरविन्दे मकरन्द निर्भरे मधुव्रतो नेक्षुरकं हि वीक्षते [தவாம்ருதஸ்யந்திநி பாதபங்கஜே நிவேசிதாத்மா கதமந்யதிச்சதி | ஸ்திதே-ரவிந்தே மகரந்த நிர்ப்பரே மதுவ்ரதோ நேக்ஷுரகம் ந வீக்ஷதே] (स्तो.र 27 – அமுதம் பெருகும் உன் திருவடித்தாமரைகளில் தன் ஆத்மாவை ஸமர்ப்பித்தவன், மற்றதை விரும்புவனோ ? மகரந்தம் நிரம்பிய தாமரை இருக்க, தேன்வண்டு நீர்முள்ளிப்பூவை நினைக்குமோ!

என்னுமளவரான एकत[ஏகத]ர்-द्रित[த்வித]ர்-त्रित[த்ரித]ர் திறத்தில், ज्ञानि[ஜ்ஞாநி]களான श्वेतद्वीपवासि[ச்வேத த்வீபவாஸி]களுடைய अनादर[அநாதர]த்தை 1 இங்கே अनुसन्धि[அநுஸந்தி]ப்பது.

प्राप्य श्वेतं महाद्वीपं नारदो भगवान् ऋषि: । ददर्श तानेव नरान् श्वेतान् चन्द्रप्रभान् नरान् ॥ पूजयामास शिरसा मनसा तैस्सुपूजित: [ப்ராப்ய ச்வேதம் மஹாத்வீபம் நாரதோ பகவாந் ரிஷி: | ததர்ச தாநேவ நராந் ச்வேதாந் சந்த்ரப்ரபாந் நராந் | பூஜயாமாஸ சிரஸா மநஸா தைஸ்ஸுபூஜித:] 2 என்று, नारद भगवान्[நாரத பகவாந்] அளவிலும் அவர்கள் பரிமாற்றம் சொல்லப்பட்டது.

उवाच मधुरं भूयो गच्छ नारद मा चिरम् । इमे ह्यनिद्राहाराश्च मद्भक्ताश्चन्द्रवर्चस: ॥ एकाग्रा: चिन्तयेयुर्मां नैषां विघ्नो भवेदिति [உவாச மதுரம் பூயோ கச்ச நாரத மா சிரம் | இமே ஹ்யநித்ராஹாராச்ச மத்பக்தாச்சந்த்ரவர்ச்சஸ: | ஏகாக்ரா: சிந்தயே யுர்மாம் நைஷாம் விக்நோ பவேதிதி] 3 என்று, भगवान् [பகவாந்] அருளிச்செய்த வார்த்தையையும் இங்கே अनुसन्धि [அநுஸந்தி]ப்பது. 'கண்டு கேட்டுற்று மோந்துண்டுழலும் ஐங்கருவி கண்டவின்பம்' என்கிற ऐश्वर्य-अनुभव [ஐச்வர்ய அநுபவ]த்திலும், 'தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம்' என்கிற आत्ममात्र-अनुभव[ஆத்ம மாத்ர அநுபவ]த்திலும், தமக்கு निस्पृहै[நிஸ்ப்ருஹை] 4 பிறந்தபடியிலே இங்கு तात्पर्य[தாத்பர்ய]ம். அங்ஙனன்றிக்கே प्रधान[ப்ரதாந]மான अनुभव-

-----------------------------

*1. மதிக்காத; 2. மஹர்ஷி நாரதபகவான், உயர்ந்த ச்வேத த்வீபத்தையடைந்து, வெள்ளை நிறத்தவரும்-சந்திரன்போல் ஒளிர்பவருமான அப்புருஷர்களைக் கண்டு, மனதாலே பூஜிக்கப்பட்டவராய், அவர்களைத் தலையால் வணங்கினார்; 3. எம்பெருமான் இனிதாகச் சொன்னார் : நாரதனே! இங்கிருந்து விரைவில் செல்; இவர்கள் இந்த்ரியமும்-உணவும் அற்றவர்கள்; என்னடியார்கள்; சந்திரன்போல் ஒளிர்பவர்கள்; ஒரே நினைவுடன் என்னை த்யாநிப்பவர்கள்; இவர்கள் த்யாநத்துக்கு இடையூறு நேரக்கூடாது; 4. ஆசையின்மை;*

[அநுபவ]த்திலே இழிந்தபடியினாலே 'श्रिय: पति[ச்ரிய:பதி]க்கு' என்கிறபடியே प्रकार[ப்ரகார]மாக 1 வல்லது, மற்றொன்றையும் தாம் अनुभवि[அநுபவி]யாத படியிலே तात्पर्य[தாத்பர்ய]மாகவுமாம். பெரியபெருமாள் திருமேனியிலே திருமலை முதலாகக் கோயில்கொண்ட अर्चावतार[அர்ச்சாவதார]ங்களிலும், राम-कृष्ण-वामन-वटपत्रशयनादि[ராம-க்ருஷ்ண-வாமந-வடபத்ர சயநாதி]களிலுமுள்ள भोग्यतै[போக்யதை]எல்லாம் சேர अनुभवि [அநுபவி]த்து, இவ் आभिरूप्य[ஆபிரூப்ய]த்திலே ஈடுபட்ட என் கண்கள், மற்றும் पर-व्यूह-विभवादि[பர-வ்யூஹ-விபவாதி]களான திருமேனிகளையெல்லாம் சேரக் காட்டினாலும், स्तनन्धय [ஸ்தநந்-தய]த்திற்கு 2 भोग्यान्तर[போக்யாந்தர]ங்கள் 3 रुचि[ருசி] யாதாற்போலே **भावो नान्यत्र गच्छति** 4 என்கிறபடியே, அவை ஒன்றும் रुचि[ருசி]யாது என்கிறாராகவுமாம். இது இவருடைய अनन्य-प्रयोजनत्व-काष्ठै[அனந்ய ப்ரயோஜநத்வ காஷ்டை] 5 இருக்கும்படி.

ஆதிமறையென ஓங்கும் அரங்கத்துள்ளே,
அருளாரும் கடலைக்கண்டவன் என்பாணன்
ஓதியதோர் இரு நான்கும் இரண்டுமான,
ஒரு பத்தும் பற்றாக உணர்ந்துரைத்தோம்

-----------------------------

*1. சரீரம்; 2. முலைப்பால் பருகும் குழந்தைக்கு; 3. வேறு இன்பங்கள்; 4. स्नेहो मे परमो राजन् त्वयि नित्यं प्रतिष्ठित: । भक्तिश्च नियता वीर* ***भावो नान्यत्र गच्छति*** [ஸ்நேஹோ மே பரமோ ராஜந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டித: | பக்திச்ச நியதா வீர பாவோ நாந்யத்ர கச்சதி] *(சிறிய திருவடி, ராமனிடம் கூறுவது : रा 7.40.15 – என் நினைவு வேறொருவரிடமும் செல்வதில்லை); 5 வேறு எந்தப்பலனும் வேண்டாமையின் எல்லை;*

நீதியறியாத நிலையறிவார்க்கெல்லாம்,
நிலையிதுவே என்று நிலை நாடி நின்றோம்
வேதியர்தாம் விரித்துரைக்கும்விளைவுக்கெல்லாம்,
விதையாகுமிதுவென்று விளம்பினோமே. 1

காண்பனவும் உரைப்பனவும் மற்றொன்றின்றிக்,
கண்ணனையே கண்டுரைத்த கடியகாதல்
பாண்பெருமாள் அருள்செய்த பாடல் பத்தும்,
பழமறையின் பொருளென்று பரவுகின்றோம்
வீண் பெரிய விரிதிரைநீர் வையத்துள்ளே,
வேதாந்த வாரியனென்றியம்ப நின்றோம்
நாண் பெரியோமல்லோம் நாம் நன்றும் தீதும்,
நமக்கு உரைப்பார்உளரென்று நாடுவோமே. 2

----------------------------

*1. வேதத்தின் முதல் அக்ஷரமாகிய ப்ரணவம் என்னும்படி உயர்ந்து நிற்கும் ப்ரணவாகார விமானத்துக்குள், கருணைக் கடலாம் அரங்கனைக் கண்டு அநுப வித்த திருப்பாணாழ்வாரால் அருளப்பட்டதும், ரஹஸ்யார்த்தங்களைப் பொதிந்துகொண்டிருப்பதால் தினமும் ஓதத்தக்கதாயும் உள்ள பத்துப் பாசுரங் களை, கதியாக அநுஸந்திதோம்; 'தத்வங்களின் ஸ்வரூபம் அறிந்தபோதிலும் யுக்திகள் அறியாதவர்களுக்கு, இப்ப்ரபந்தமே உறுதியளிப்பது என்பதாகக் கொண்டு, பகவதநுபவத்தை அடைய விரும்பினோம். மேலும், வேதாந்திகளின் வ்யாக்யானங்களுக்கெல்லாம், இப்பரபந்தமே வித்தாகும்' என்று கூறினோம்.*

*2. பார்ப்பதும்-பேசுவதும் வெவ்வேறு வஸ்துவாக இல்லாமல், எம்பெருமா னையே கண்டு-அவனையே பேசியவரும், மிகுந்த பக்தியுடையவருமான திருப்பாணாழ்வார் அருளிய பத்துப் பாசுரங்களையும், அநாதியான வேதத்தின் ஸாரம் என விளக்கிக் கொண்டாடுகின்றோம். மிகவும் விரும்பப்படுவதும், அகன்ற அலைகடலால் சூழப்பட்டதுமான இப்பூமண்டலத்தில், 'வேதாந்தாசார்-யன்' என அரங்கனே புகழும்படி ஆனோம். இருப்பினும், அஹங்காரம் கொள்ள மாட்டோம்; நன்மை-தீமைகளை நமக்கு உபதேசிக்கும் ஆசார்யர்கள் இருப்பர் என உறுதியுடன் தேடி நிற்போம்.*

इति कवितार्किकसिंहः सम्यग्व्याचष्ट सात्विक-प्रीत्यै ।
मुनिमहित सुकवि-गाथा-दशकमिदं देशिकोपज्ञम् ॥ 1

[ இதி கவிதார்க்கிகஸிம்ஹ: ஸம்யக்வ்யாசஷ்ட ஸாத்விக ப்ரீத்யை |
முநிமஹித ஸுகவி-காதா-தசகமிதம் தேசிகோபஜ்ஞம் || ]

मुनिवाहन भोगोऽयं मुक्तैश्वर्य रसोपमः ।
कृपया रङ्गनाथस्य कृतार्थयतु नः सदा ॥ 2

[ முநிவாஹந போகோயம் முக்தைச்வர்ய ரஸோபம: |
க்ருபயா ரங்கநாதஸ்ய க்ருதார்த்தயது ந: ஸதா || ]

------------------------------

*1. இவ்வாறு, வேத-விற்பன்னர்களால் அறியப்பட்டதும், லோகசாரங்க முனிவரால் கொண்டாடப்பட்டதும்-சிறந்த கவியாம் திருப்பாணாழ்வாரால் அருளப்பட்டதுமான இப்பத்துப்பாட்டுகளையும், கவி-தார்க்கிக ஸிம்ஹமாம் வேங்கடநாதன், ஸாத்விகர்களின் உகப்பின் பொருட்டு, விரித்துக் கூறினார்.*

*2. பரமபதத்தில் முக்தர்களால் அநுபவிக்கப்படும் ப்ரஹ்மானந்த ரஸத்தை ஒத்த இந்த 'முநிவாஹந போகம்', ஸ்ரீரங்கநாதன் திருவருளால் எப்போதும் நம்மை, 'பயன் பெற்றவராக' ஆக்கட்டும்.*

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्र स्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
मुनिवाहनभोगः सम्पूर्णः ।

[இதி கவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரஸ்ய ஸ்ரீமத்
வேங்கடநாதஸ்ய வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு
**முநிவாஹநபோக: ஸம்பூர்ண:**]

/ ஸ்ரீ திருப்பாணாழ்வார் திருவடிகளே சரணம் /

/ श्रीमते निगमान्त महादेशिकाय नमः /

/ ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம: /

<u>குறிப்பு</u> : 1] திருமந்த்ரார்த்தங்கள் பாசுரங்களில் குறிப்பிட்டது

| *மந்த்ர பாகம்* | குறிப்பிடுவது | பாசுரம் |
|---|---|---|
| *-அகாரம் / லுப்த சதுர்த்தி* | -भगच्छेषत्व पर्यवसानं [பகவச்-சேஷத்வ பர்யவஸாநம்] | -அமலன் |
| *-உகாரம்* | -अन्य शेषत्व निवृत्ति [அந்ய சேஷ-த்வ நிவ்ருத்தி] | -உவந்த |
| *-மகாரம்* | -चेतनाचेतनवर्ग- कर्माधिकारत्वं [சேதநாசேதந வர்க்க கர்மாதிகா-ரத்வம்] | -மந்திபாய் |
| *-நம:* | -अहङ्कार-ममकार निवृत्ति [அஹங் கார-மமகாரநிவ்ருத்தி] | -சதிர மதிள் |
| *-நாராயண* | -उपायत्व-उपेयत्व[உபாய-உபேய] ங்களுக்குத் தேவையான सौलभ्य-सौशील्यं / नराज्जातानि तत्वानि [ஸௌலப்ய-ஸௌசீல்யம் / நரா-ஜ்ஜாதாநி தத்வாநி] | பாரமாய / துண்ட வெண்பிறையன் |
| *-ஆய* | -कैंकर्य-अनुभवं परवश [கைங்கர்ய அநுபவம் பரவச]மாக்கினது] | -கை/ பரி / ஆலமா / கொண்டல் |

<u>குறிப்பு</u> : 2] - 'திருவாய்மொழிக்காக ஸங்க்ரஹம் முதல் திருவாய்மொழி' என்கிறது', ஈடு-மூன்றாம் श्रिय:पति व्याख्यानम्[ச்ரிய:பதி வ்யாக்யாநம்]. அதுபோலவே, திருமந்த்ரார்த்த-गर्भ[கர்ப்ப]மான ***"அமலனாதி பிரான் ப்ரபந்தத்துக்கான ஸங்க்ரஹம், முதல் பாசுரமாம் அமலன்"*** என்னலாம்படி அமைந்துள்ளது ரஸிக்கத்தக்கது ( 21-ம் பக்கம் பார்க்க)

<u>குறிப்பு</u> : 3] **பராங்கு*சன்*** பின்னடி நடக்கும் பாணன் :

ஆழ்வார்களுக்குள், குருகேசன் 'அங்கி' என்றும், மற்றவர் 'அங்க' மென்றும் வ்யாக்யாதாக்கள் வகுத்து வைப்பர். சடகோபன் செப்பிய வேதப் பொருளையே மற்ற ஆழ்வார்களும் அநுபவிப்பர். அந்தக் கணக்கிலே பாணன்

பின்பற்றியது, திருப்புளியாழ்வாரின் **திருவாசிரியத்தை**, என்பதைச் சற்றே அநுபவிப்போம் :

நம்மாழ்வாரின் நான்கு ப்ரபந்தங்களில் முதலாமது, திருவிருத்தம். இதை ரிக்வேதஸாரம் என்றும், 'எம்பெருமானைத் தவிர வேறு எதிலும் பற்றற்று "அடியேன் செய்யும் விண்ணப்பமே" என அவனையே **பரபக்தி** நிலையில் வேண்டுகிறார் எனவும் பணிப்பர். இரண்டாமதான திருவாசிரியம், யஜுர்வேத ஸாரமென்றும் [ओमित्यग्रे व्याहरेत् । नम इति पश्चात् । नारायणायेत्युपरिष्टात् । ओमित्येकाक्षरम् । नम इति द्वे अक्षरे । नारायणायेति पञ्चाक्षराणि । एतद्वै नारायणस्याष्टाक्षरं पदम् । यो ह वै नारायणस्याष्टाक्षरं पदमध्येति [ஓமித்யக்ரே வ்யாஹரேத் | நம இதி பச்சாத் | நாராயணாயேத்யுபரிஷ்டாத் | ஓமித்யேகாக்ஷரம் | நம இதி த்வே அக்ஷரே | நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி | ஏத்த்வை நாராயணஸ் யாஷ்டாக்ஷரம் பதம் | யோ ஹ வை நாராயணஸ்யாஷ்டாக்ஷரம் பத மத்யேதி] – இது नारायणाथर्वशिरोपनिषत् [நாராயணாதர்வ சிரோ பநிஷத்] என்று சிலரும்; யஜுச்சாகையில் அந்தர்கதம் என்று சிலரும் சொல்வர். ] **பரஜ்ஞாந** நிலையில் தர்சன -ஸமாநாகாரமான அநுபவத்தில் மூழ்கிப் பெருகிய பேச்சு என்றும் கூறுவர்; இது வேண்டுதல் ஏதுமின்றி, "தனிப்பெரு நாயக ! மூவுலகளந்த சேவடியோயே !" என, அநுபவத்தை மட்டும் சொல்வதாக அமைந்திருப்பதிலிருந்து வெளிப்படை. நிற்க,

பாணன் பக்கல் பார்ப்போம். இவருடைய ஒரே ப்ரபந்தமாகிற 'அமலனாதிபிரான்', **யஜுர்வேத ஸாரமாம் திருமந்த்ரத்தின் பொருளை** விளக்க வந்தது என்பதே, பெரியவர்களின் கருத்தை ஒட்டிய ஸ்வாமி தேசிகனின் நிர்வாஹம். எல்லா வேதங்களுமே அஷ்டாக்ஷரப்பொருளை விளக்குபவையே என்பது "ஓவாதே நமோ நாரணாவென்று இருக்கெசுச் சாம நாண்மலர் கொண்டு . . . " [பெரியா. தி 5.1.6] என்ற ஆழ்வார் ஸ்ரீ ஸூக்தியிலிருந்து விளங்கும். மேலும், பாணனின் **பரஜ்ஞாந** நிலையை ஸ்வாமி தேசிகன் தன் வ்யாக்யாநத்தில், "இப்प्रबन्ध [ப்ரபந்த]ம், अति विस्तर[விஸ்தர]ம், अतिसङ्कोच [அதிஸங்கோச]ம், अधिकृत–अधिकारत्व[அதிக்ருத-அதிகாரத்வ]ம், दुर्ग्रहत्व [துர்-க்ரஹத்வ]ம், दुरवबोधार्थत्व[துரவபோதார்த்தத்வ]ம், संशयादि जनकत्व [ஸம்சயாதி ஜநகத்வ]ம், विरह क्लेश[விரஹ க்லேச]ம், दूतप्रेषण[தூத

ப்ரேஷண]ம், परोपदेश[பரோபதேச]ம், परमत निरसन[பரமத நிரஸந]ம் என்றாற் போலே மற்றுள்ள अध्यात्म प्रबन्ध [அத்யாத்ம ப்ரபந்த]ங்களிலுள்ளவை ஒன்றுமின்றிக்கே, अनुभवघन रस [அநுபவ ரஸ]மாயிருக்கிறது...இப்ப்ரபந்தம் தலைக்கட்டுகிறவளவிலும் தம்முடைய ஊரும் பேரும் பேச மறக்கும்படி தாம் பெற்ற அநுபவம் ..", என்று ச்லாகிதிருக்கிறார். மாறனும் ஆசிரியப்பாவில் தம்மை மறந்தவர்தானே!

இவ்வளவால், சடகோபனுக்கும்-பாணனுக்கும் உள்ள கருத்து-ஒற்று மையும்; ஆசிரியப்பாவை ஒட்டியதே 'அமலன்' என்பதும் காட்டப்பட்டது. இது மட்டுமன்றி, இரு ப்ரபந்தங்களுக்குள் அமைந்த சொல்-ஒற்றுமையும் ஸ்வரஸம். விரிவுக்கு அஞ்சி, சுருக்குகிறோம். கற்பூர-புத்தி கொண்ட ஸாத்விகர்க்கு இந்த அட்டவணையே அநுபவமாக அமையும் :

| *திருவாசிரியம்* | **'அமலன்'** |
|---|---|
| *-செக்கர் மாமுகிலுடுத்து மிக்க செஞ்சுடர் பரிதிசூடி/ பீதகவாடை* | **-அரைச் சிவந்த ஆடை** |
| *-மூவுலகளந்த சேவடியோயே* | **-உலகமளந்து** |
| *-பூண் முதலா/ -மேதகு பல்கலன் அணிந்து* | **-கோலமாமணியாரமும் முத்துத் தாமமும்** |
| *-வாயவும்* | **-செய்ய வாய்** |
| *-கண்ணவும்* | **-பெரிய கண்கள்** |
| *-மரதகக் குன்றம்/ பச்சை மேனி* | **-நீல மேனி** |
| *-முடி* | **-நீள் முடியன்** |
| *-(பச்சை மேனி) மிகப் பகைப்ப* | -[ஸமுதாய *சோ*பையாலே பூர்ண மாய், முன் பெற்றதாய் நினை த்திருந்த பூர்த்தியை இழந்தது- **தேசிகன்]** |
| *-நச்சுவினைக் கவர் தலை அரவினமளி ஏறி* | **-அரவைனணைமிசை மேய** |

| | |
|---|---|
| *-சிவனயனிந்திரன் .....தெய்வக் குழாங்கள் கைதொழக்கிடந்த* | -[परिचर्यार्थ[பரிசர்யார்த்த]மாக வந்து पार्श्ववर्ति[பார்ச்வவர்த்தி] களாய்நிற்கும் பத்மயோநி -**தேசிகன்]** |
| *-சேவடி* | -கமல பாதம் |
| *-ஏ !* | -ஐயோ ! |
| *-உலகு படைத்து உண்ட எந்தை* | ***-அண்டரண்ட. . . முற்றுமுண்ட கண்டம்/ ஞாலமேழுமுண்டான்*** |
| *-அறைகழல் சுடர்ப்பூந்தாமரை சூடுதற்கு அவாவு ஆருயிர்* | **-திருக்கமலபாதம் வந்து என் கண்ணினுள்ளன** |
| *-மாயாப் பெருவிறலுலகம் மூன்றி னொடு நல்வீடு பெறினும் கொள்ளுவது எண்ணுமோ ?* | **-மற்றொன்றினைக் காணாவே !** |
| *-மூவுலகம் விளைத்த உந்தி* | **அயனைப் படைத்ததோர் எழில் உந்தி** |
| *-மாமுதலடிப்போதொன்று கவிழ்த்து* | -[மேலே கவிழ்த்த கனகசத்ரம் போலே – **தேசிகன்]** |
| *-முழுவதும் அகப்படக் கரந்து ஓர் ஆலிலைச் சேர்ந்த* | **-ஆலமாமரத்தின் இலைமேல் ஒரு பாலகனாய்** |

<u>குறிப்பு</u> : 4] **பெரியாழ்வார்** பின்னடி நடக்கும் பாணன் :

கல்பஸூத்ர வ்யாக்யாதாவாக நின்றபோதிலும், ரிஷிகளைப் போலே கரையிலே நின்று எம்பெருமானை சொல்லிப்போகையன்றிக்கே, **கோப-**ஜந்மத்தை ஆஸ்த்தானம் பண்ணி, ‘விட்டுசித்தன் மனத்தே கோயில்கொண்ட கோவலன்’ என்றபடி, பாவநா-ப்ரகர்ஷத்தாலே ய*சோ*தாதிகள் சொல்லும் பாசுரத்தை, தாம் அவர்களாகப் பேசி எம்பெருமானின் அவதார-குண-சேஷ்டிதங்களை தம் திருமொழியில் அநுபவித்த பெரியாழ்வார், இருபது பாசுரங்களால் சுபாச்ரயமான திவ்யமங்கள விக்ரஹத்தின் *சோ*பையில், அவயவங்கள்தோறும் தன்னை இழக்கிறார். அதிலிருந்து ஒருபடியான

**பாதக்கமலம்** (1)/ **அழகிய உந்தி** (8)/ **உதரம்** (9)/ **திருமார்பு** (10)/ **கண்டம்** (13)/ **செந்தொண்டை** (14)/ **கண்கள்** (16) இவைகளை, साक्षात् रङ्गनाथस्य श्वशुर [ஸாக்ஷாத் ரங்கநாதஸ்ய ச்வசுர]ரான விஷ்ணுசித்தர் गरुड-वाहन[கருட-வாஹன]னைப் பாடியதை அநுவதித்து, मुनि-वाहन[முநி-வாஹந]ரும் முறையே அநுபவிப்பதை ஒத்திட்டுப் பார்ப்பது ஸ்வரஸம். *['சீதக்கடலுள்' பதிகப் பாசுர எண்கள் அடைப்புக் குறிக்குள் கொடுக்கப்பட்டுள்ளன]*

<u>குறிப்பு</u> : 5) பாணன் பின்னடி நடக்கும் **பரகாலன்** :

ஒரு ப்ரபந்தத்தின் வைலக்ஷண்யம், பல அளவுகோலால் கணக்கிடப் படும். அதில் ஒன்று, 'பிற்பட்டோர் எத்துணைபேர்/ எந்த அளவுக்கு இதை வித்தாகவும்/ மேற்கோளாகவும் கையாளுகிறார்கள்' என்பது. அவ்வாறு நோக்குங்கால், கீழே குறிப்பிட்ட பராங்குச-பாணர்களின் கருத்துக்களை 'கடைக் குட்டி' ஆழ்வாரான பரகாலன் அடியொற்றியது, நம் கவனத்தை ஈர்ப்பதாகும்.

நக்ஷத்ரக் கணக்கிலே [கார்த்திகை] முற்பிறந்தவராகிலும், நாட் கணக்கிலே பின்தோன்றிய சித்ரகவியான பரகாலன், பரமனைப் பாடியே பாண்பெருமாள் [ரோஹிணீ-ஜாதம்] எனப் பெயர்பெற்ற सुकवि[ஸுகவி] யான பாணனின் கருத்திலே மையல் கொண்டமை இயற்கையே. இருவர் ப்ரபந்தத் திற்கும் கரு, அஷ்டாக்ஷரமே! திருப்பாணாழ்வார் 'எம்பெருமானின் ஜகத்-காரணத்வம்/ ரக்ஷகத்வம்' இவைகளைக் குறிக்கும் 'அமலன்/ ஆதி/ பிரான்' எனத் தொடங்கினார். இதை ஒட்டி, கலியனும் தன்னுடைய ஆறு ப்ரபந்தங் களில் நான்காவதான திருவெழுக்கூற்றிருக்கையில் 'உந்தியில் அயனைப் படைப்பதிலும்/ ஒரு சிலை ஒன்றி . . . . . வாளியில் அட்டதையும்' அநுஸந்தித்துத் தொடங்கி, ப்ரபந்தம் முழுவதிலும் பலவாறு அநுவதிக்கிறார். எப்படியென்று பார்ப்போமா !:

| *'அமலன்'* | திருவெழுக்கூற்றிருக்கை |
|---|---|
| *-ஒரெழில் உந்தி மேலதன்றோ* | -ஒருபேருந்தி |
| *-அயனைப் படைத்த* | -ஒரு முறை அயனை ஈன்றனை |
| *-வெங்கணைக் காகுத்தன்/ சதுர . .வெங்கணையுய்த்தவன்* | -இலங்கை . . . வாளியில் அட்டனை |

| | |
|---|---|
| *-உவந்த உள்ளத்தனாய் உலகம் அளந்து அண்டமுற நிவந்த நீள் முடியன்* | -மூவடி நானிலம் வேண்டி . . . ஈரடி மூவுலகளந்தனை |
| *-அமரர்க்கு அரிய ஆதிப்பிரான்* | -ஆறுபொதிசடையோன் அறிவரும் தன்மைப்பெருமையுள் நின்றனை |
| *-அண்டரண்ட. . . முற்றுமுண்ட கண்டம்/ ஞாலமேழுமுண்டான்* | -ஏழுலகு எயிற்றினில் கொண்-டனை |
| *-கொண்டல் வண்ணனை* | -முந்நீர் வண்ண ! |
| *-கடியார் பொழில்/ அஞ்சிறைய வண்டுவாழ் பொழில் சூழ்* | -குன்றா மதுமலர்ச்சோலை |
| *-அரவினணைமிசை மேய மாயனார்* | -ஆடரவமளியில் அறிதுயிலமர்ந்த பரம ! |
| *-திருக்கமலபாதம் வந்து* | -நின் அடியிணை பணிவன் |
| *-பாரமாய பழவினை பற்றறுத்து/ வேங்கடவன்* | -வருமிடரகலமாற்றோ வினையே. |

குறிப்பு : 6] பாணன் பின்னடி நடக்கும் **தூப்புல் புநிதன்** :

"புகலறிவார், முன்னடி பார்த்து முயலுதலால அவர் சாயையெனப் பின்னடி பார்த்து" வர்த்திப்பதே நாம் செய்யவேண்டிய க்ருத்யமாகும். அவ்வாறே, *"மாறன் துணையடிக்கீழ் வாழ்வை உகப்பவ*'ரும்/ *"கலியனுரை குடிகொண்ட கருத்துடையோ*'னும்/ *"வானில் மால் கருட வாஹநனாய்த் தோன்ற வாழ்த்தும்*' விஷ்ணுசித்தரை வணங்குபவரும் / *"பாணர்தாள் பரவி"* நிற்பவருமான ஸ்வாமி தேசிகன், பாணர் பாடலை விடுவாரா ? தம் ஸ்தோத்ர (அநுபவ) க்ரந்தங்களான **'பகவத் த்யாந ஸோபாநம்/ தேவ நாயக பஞ்சாசத்/ அச்சுய ஸயயம் [அச்சுத சதகம்]'** இவைகளில் அநேகமாக இக்கருத்தையே கையாண்டு, அரங்கனின் / அயிந்தை நகர்மேயவப்பனின் அவயவ/ ஸமுதாய *சோபை*களில் தம்மை இவ்வாறு இழக்கிறார் :-

| *'அமலன்'* | भगवद्ध्यान सोपानम् | देवनायक पञ्चाशत् | अच्चुअ सअअम् |
|---|---|---|---|
| *-திருக்கமல பாதம் வந்து* | -पादांभोजं प्रतिफलति मे भावना दीर्घिकायाम् (2) [பாதாம்போஜம் ப்ரதிபலதி மே பாவநா தீர்க்கிகாயாம்] | -- | -कमण खणजणिअ सुरणइ पसमिअ तेल्लोक्क पाअअं **पअपदुमम्** (43)[கமண கண ஜணிய ஸுரணஇ, பஸமிய தெல்லொக்க பாயயம் பய பதுமம்] |
| *-அரைச் சிவந்த ஆடை* | -- | -- | -महुकइढव सोणिअ पडल **परिपाड-लम्बर** (40)[மஹுகஇடவஸோணிய படல பரிபாடலம்பர] |
| *-அயனைப் படைத்த ஓர் எழில் உந்தி* | -नालीकेन स्फुरित रजसा वेधसो निर्मिमाणा रम्यावर्तद्युति सहचरी रङ्गनाथस्य **नाभि**:(5) [நாலீகேன ஸ்புரித ரஜஸா வேதஸோ நிர்மிமாணா, ரம்யாவர்த்தத்யுதி ஸஹசரீ ரங்கநாதஸ்ய நாபி:] | -- | -**णाहिरुहं** . . बम्हभमरं (39) [**ணாஹி ருஹம்** ... பம்ஹ பமரம்] |
| *-வயிற்று* | -- | -- | -बम्हण्डेहि विभरिअंउअरं(38) [பம்-ஹண்டேஹி விபரியம் ...**உயரம்**] |
| *-திருவார மார்பு* | -श्रीपदन्यासधन्यं ...चन्द्रिकोदार हारं ...**मध्यं बाहो**: (6) [ஸ்ரீபத-ந்யாஸதந்யம் ... | -श्रीवत्स कौस्तुभ रमा वनमालिका-ङ्गं **बाहुमध्यं** (32) [ஸ்ரீவத்ஸ | - ठिरवणमालं **वच्छं**(36) [டிர வந-மாலம் **வச்சம்**] |

| | | | |
|---|---|---|---|
| -உண்ட கண்டம் | சந்த்ரிகோதார ஹாரம் ... மத்யம் பாஹோ:] -- | கௌஸ்துப ரமா வநமாலிகாங்கம் பாஹூமத்யம்] -कण्ठे गुणी भवति (28) [கண்டே குணீ பவதி] | -- |
| -செய்ய வாய் | -स्मितविकसितं चारुबिंबाधरोष्ठं (8) [ஸ்மித விகஸிதம் சாரு பிம்பா-தரோஷ்டம்] | -आरुण्यपल्लवितबिंबा-धरं(27 [ஆருண்ய பல்ல வித பிம்பாதரம்] | -- |
| -கரியவாகி . . . கண்கள் | -स्वान्तेगाढं मम विलगति स्वागत उदार नेत्रं (8) [ஸ்வாந்தே காடம் மம விலகதி ஸ்வாகத உதார நேத்ரம்] | -स्निग्धायतं प्रथिमशालि विलोचनं (24) [ஸ்நிக்தா-யதம் ப்ரதிமசாலி விலோசநம்] | -पदुमसरिच्छप्पसण्ण लोअण जुअळम् (35) [பதும ஸரிச்ச ப்பஸண்ண லோயண ஜுயளம்] |
| -எழில் நீல மேனி . . . நெஞ்சினையே | -मध्ये रङ्गं मम च हृदये वर्तते सावरोध: (11) [மத்யே ரங்கம் மம ச ஹ்ருதயே வர்த்தே ஸாவரோத:] | -प्रत्यङ्गपूर्ण सुषमा सुभगं वपुस्ते दृष्ट्वा दृशौ . . . न तृप्यतो मे (14) [ப்ரத்யங்க பூர்ணஸுஷமா ஸுபகம் வபுஸ்தே, த்ருஷ்ட்வா த்ருசௌ ந த்ருப்யதோ மே] | -सामं तुज्झ तणुं . . . णिहिं व पेच्छन्ति (45) [ஸாமம் துஜ்ஜ தணும் ...ணிஹிம் வ பெச்சந்தி துமம்] |



## ABOUT THE AUTHOR

Sri U.Ve.Nelvoy Sowmya Narayanachariar swami, popularly known as **Nam Sowmyan** born on Margazhi Chitrai star, is the only son of Sri Nelvoy Narasimhachariar, a great scholar in Vedas and Agama sastras. Like his father, **Nam Sowmyan** is also a great scholar who can reach out to all the levels of audiences and is well known in Mumbai and in Chennai. Like Swami Desikan, Nam Sowmyan got all his sampradaya knowledge from his maternal uncle Thirukottiyur Sri Ramanujachariar, son of great Tirukkottiyur swami.

**Nam Sowmyan** is a Chartered Accountant and has worked in the general insurance industry at various levels. He retired from corporate services as the CEO of GIC Housing Finance Ltd in the year 2002. Post retirement he dedicated himself to the service of teaching sampradaya texts (rendering kalakshepams) at various locations in Mumbai and other cities. His first discourse of Srimad Rahasyatrayasaram at Sri Vedanta Desika Sampradaya Sabha, Mumbai was well received by the Srivaishanavaites of Mumbai.

**Nam Sowmyan** has written many other books viz," Chitra Saram, Srimad Rahasyatryasara surkku, Chatusloki Vyakyanam, Swami Desikan's Vazhithirunama Vilakkam, Srivaishnava Namittika Sangraham" etc.

Vainavan Kural wish him all success in his future endeavours.

**VAINAVAN KURAL**
Editorial Board

# அமுதினைக் கண்ட கண்கள்



கண்டம்... அடியேனை
உய்யக்கொண்டதே



செய்யவாய் ஐயோ என்னைச்
சிந்தை கவர்ந்ததுவே



கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து
செவ்வரியோடி நீண்ட அப் பொரியவாய
கண்கள் என்னைப் பேதமைசெய்தனவே



ஓர் எழில் நீலமேனி ஐயோ
நிறைகொண்டது என் நெஞ்சினையே



என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே